# மரணத்திற்குப் பின்...




மெய்வழி சோமசுந்தரம் செட்டியார்
(வித்துவான் கெ. சி. சோமசுந்தரம்)




48, கதீட்ரல் சாலை,
சென்னை-600086.

1981 — 3-50.

First Edition : December 1981


MARANATHIRKKUPIN
by Meivazhi Somasundaram Chettiar
(Vidwan K. C. Somasundaram)

Price Rs. 3-50

Published by
Selvan Pathippaham
48, Cathedral Road, Madras-600086.

Printed by
Sri Agastya Printers
Pondy Bazaar, Madras-600017.

## பதிப்புரை

### இந்நூலாசரியரைப் பற்றி......

இந்நூலாசரியர் வடாற்காடு மாவட்டம் ஆரணி மாநகரத்தில் பழம்பெரும் வீர சைவ குலத்தில் பிறந்தவர். ஈசன் இருப்பிடம் இதயம் என்பதை வெளியிலே எடுத்துக் காட்டும் அக்குல மரபுப்படி இவர்தம் சிறு பிராயத்தில் துணியால் முடிந்து கட்டிய அட்டபந்தன லிங்கத்தைக் கழுத்திலே தொங்கக் கட்டிக் கொண்டு வாழ்ந்தவர். எளிமையும் இனிமையும் கலந்த உண்மைத் தமிழ்ச் சுவையாகிய பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடியருளிய வடலூர் வள்ளற் பெருமானாரின் திருவருட்பாக்களால் ஈர்க்கப் பெற்றவர். தமிழ் வித்துவான் படிப்பு முடித்துத் தமிழாசிரியராக வடாற்காடு மாவட்ட நாட்டேரி அரசுயர் பள்ளியில் பணியாற்றிக் கொண்டிருப்பவர்.

சைவ சமய இயம நியமங்களில் சிறிதும் வழுவாது வாழ்ந்த நூலாசரியரின் தூலத் தந்தையார் அடைந்த கொடும் மரண வாதனை கண்டு அதிர்ச்சியடைந்தார். இப்படியெல்லாம் வாழ்ந்தும் இக்கோரக் கொடிய மரணப்பிடியில் இல்லறவாசிகள் சிக்கத்தான் வேண்டுமா என்ற வினா சிந்தையில் அச்சுறுத்திக் கொண்டே இருந்தது. அதுபோது 'செயலில் இல்லாத வாசகங்களே இதில் இல்லை' என்று முகப்பிலேயே அச்சிடப் பெற்ற 'சாகாக் கலை கிரந்தம்' என்ற நூல் ஒன்றை இந்நூலாசரியர் மெய்வழிச் சபையார் ஒருவரிடமிருந்து பெற்றார். அதில்,

'அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும்'

என்ற திருக்குறளுக்குச் சாலை ஆண்டவர்கள் அருளிச் செய்துள்ள திருவாக்குகள் இப்புலவரின் உள்ளத்தைத் தொட்டன. இந்த ஒரே ஒரு திருக்குறள் நம் போன்ற இல்லறவாசிகளுக்குச் செயலாகக் கைவரவானுல் போதும் என்று எண்ணிக் கொண்டே மெய்வழிச்சாலை சென்ருர்; ஆண்டவர்களின் அங்கத்தில் ஒருவரானுர்; 'மருவுமிந்த உடலுக்குள் உடலைக் காட்டும்' பிரம்மோபதேசமும், 'வேதம் விளங்கும் பாத' தீட்சையும் பெற்ருர்.

சிறுவயதில் நகலாகத் துணியால் முடிந்து கட்டிக் கொண்டிருந்த லிங்கத்தை ஆண்டவர்கள் இந்நூலாசிரியரின் ஜீவதேகத்தில் அசலாக 'இனி முடிந்து கட்டாத லிங்க'மாகக் காட்டியருளக் கண்டார்.

சாலை ஆண்டவர்கள் தந்தருளிய பழமைப் புது அறிவு கொண்டு இந்நூலாசிரியர் '**கடோபநிஷத்தை**' துள்ளி விளையாடும் பள்ளிப் பிள்ளைகளும் புரிந்து கொள்ளும் வண்ணம் நாடக வடிவிலே தந்துள்ளார். அனைவரும் படித்துப் பயன்பெறுவார்களாக!

—'**செல்வன்**'

ஆதியே துணை

# அணிந்துரை

மனிதன் இருப்பது நிச்சயமல்ல. அவன் இறப்பது நிச்சயம். எந்த மனிதனும் சாவை ஒருநாள் சந்தித்தே தீர வேண்டும். மனிதரில் எவரும் எங்கிருந்து இந்த உலகிற்கு வந்தோம், இனிச் செத்தபின் எங்கு செல்லப் போகிறோம் என்பதை நினைப்பதே கிடையாது.

மக்களில் எவரேனும் ஒருவர் அதிகமான கஷ்ட நஷ்டங்களுக்கு உள்ளாகிக் கண்கலங்கி அவஸ்தைப் படுங்கால், அது கண்ட பிறமக்கள் 'அவனென்ன, மரணாவஸ்தைப் படுகிறான்' என்று சொல்லுவார்கள். அதனால் மரணாவஸ்தையை விடப் பெரியதொரு அவஸ்தை, இவ்வுலகில் இல்லை என்று தெரிகிறதல்லவா?

'உலகம் தன்னைத்தானே சுத்துகிறது' என்று சொல்லுகிறார்களே, அது எப்படி என்று கேட்கும் ஒருசிறு குழந்தைக்கு இடதுகைக் கட்டை விரலுக்கும், அக்கையின் ஆட்காட்டி விரலுக்கும் இடையில் ஒரு சுண்டைக் காயை வைத்து, வலது கை ஆட்காட்டி விரலால் அந்தச் சுண்டைக்காயை உருட்டிக் காட்டும் உபமானம் போல, மரணாவஸ்தையைப் பற்றி ஒரு சிறிய அளவிற்குத்தான் உபமானம் எடுத்துக் கூறமுடியும்.

ஒரு பெரிய அண்டா நிறைய வேப்பெண்ணெயை வைத்து விட்டு, அந்த எண்ணெய் முழுமையும் ஒரு குற்றவாளி குடித்தே தீர வேண்டும் என்ற தண்டனையைக் கொடுத்து விட்டு, அரசின் யுத்த வீரர்கள் அவனைச் சுற்றி நின்று கொண்டு, கட்டாயப் படுத்திச் சவுக்கால் அடித்தால், எண்ணெயைக் குடிக்க வேண்டிய மனிதனின் நிலை எப்படி இருக்கும்? இதை ஓரளவிற்கு அனுபவித்துப் பார்க்க வேண்டுமானால், நாலு சொட்டு வேப்பெண்ணெயை ஒரு மனிதன் தன்நாக்கில் வைத்துப் பார்க்க வேண்டும்.

ஒரு பெருந்தீயை வளர்த்து அது கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருக்கும் நேரத்தில், ஒரு குற்றம் செய்த மனிதனைப் பிடித்து வந்து கால்களையும் கைகளையும் இறுக்கக்

கட்டி, அவனிடம் 'உன்னைத் தூக்கி இந்தத் தீயில் போடும்படி அரசின் உத்தரவு' என்று சொன்னால் அவன் மனம் எப்படிப் பதைபதைத்துத் துடிக்கும்?

ஒரு குற்றம் செய்த மனிதனின் உடம்பு முழுவதும் ஒரு அங்குல குண்டு ஊசியை ஆயிரக் கணக்கில் குத்திப் பின்னர் அவன் கண் பார்க்க அவனுடைய கை, கால் விரல்களை எல்லாம் சன்னம் சன்னமாக வெட்டினால், அம்மனிதனின் அவஸ்தை எப்படி இருக்கும்?

ஒரு மனிதனை ஒரே நேரத்தில் ஆயிரம் தேள்கள் கொட்டிக் கொண்டே இருந்தால் அவனின் அவதி எவ்வளவு அதிகமாக இருக்கும்?

நிஜமான மரண வேதனை ஒரு மலையளவு என்றால் நான் மேலே விவரித்து விளக்கி இருப்பது ஒரு கடுகளவேயாகும். இவற்றை வைத்து உண்மையான அறிவுள்ள மக்கள் மரணவஸ்தையைப் பெருக்கிப் பார்த்துக் கொள்ளுங்கள்.

இவ்வித மரண அவஸ்தையிலிருந்து தப்பித்துக் கொள்ள வேதங்கள் பல வந்தன. வேதங்கள் இவ்வுலகப் படிப்பாளிகளால் எழுதப் பெற்றவைகள் அல்ல. பிறப்புகள் அனைத்துக்கும் தாயும் தந்தையுமாகிய கடவுளே மனித உருவெடுத்து வந்து, மனிதனை உய்விக்கும் பொருட்டு அவனுக்கு வழி காட்டி, அப்படிக் காட்டிய வழிகளை எழுத்தில் எழுதி வைத்தவைகளே வேதங்கள்.

ஆரிய வேதத்தின் சாரம், உபநிஷத்துகள். அவற்றில் முக்கியமானவை பத்து. அதிலும் தலையாக உள்ளது கடோபநிஷத்து. அந்த உபநிஷத்தை அடிப்படையாக வைத்து **'மரணத்திற்குப் பின்'** என்ற நூலை, **புலவர் மெய்வழி சோமசுந்தரம் செட்டியார்** அவர்கள் எளிய தமிழில் எல்லா மக்களும் புரிந்து கொள்ளும்படியாக எழுதி இருக்கிறார்கள். இந்நூலை நன்மக்கள் படித்து நற்பயனைப் பெறுவார்கள் என நம்புகிறேன்.

48, கதீட்ரல்சாலை,
சென்னை—600086,

**மெய்வழி ராஜன் அனந்தர்**
(அ. வெ. தியாகராஜா)

# ஆசிரியன் முன்னுரை

நாம் ஏன் பிறந்தோம்? முடிவில் நம் கதி என்னவாகும்? மரணமல்லவா முடிவில் ஒவ்வொருவரையும் தாக்கி வீழ்த்தி விடுகிறது? உலகில் ஓர் அறிவு முதல் ஐந்து அறிவு வரையுள்ள உயிர்கள் எல்லாம் பிறந்து வளர்ந்து மடிவன போலவே மனிதனும் இறுதியில் மரணத்தைத் தழுவி மடிய வேண்டுமென்றால் மற்ற உயிர்களுக்கும் மனிதனுக்கும் என்ன வேறுபாடு இருக்கிறது? மனிதனும் மற்ற உயிர்களும் மடிவதில் ஒன்றாகி விடலாமா?

இவ்வினாவிற்கு விடைதந்து மற்ற உயிர்களினும் மனிதன் உயர்ந்தவன் என்பதை நிலை நிறுத்தி மரணத்தை வென்று நின்று வாழ்வதற்கு வழிகாட்டவே உலகில் அனைத்து மதங்களும் வந்தன; வேதங்களும் வந்தன.

மண்ணில் நெளியும் ஒரு புழு செத்தால் அதன் ஆவி—உயிர் பேயாகி விடுவதில்லை. அதுபோல் மற்ற உயிர் வர்க்கங்கள் செத்தால் அவைகள் பேய்த்தேகம் எடுப்பதில்லை.எனவே, அவற்றிற்கு நரக துன்பம் என்பதொன்றில்லை. ஆனால் எல்லா உயிர்களிலும் உயர்ந்தவனான மனிதன் செத்தால் அவன் பேயாவி, அவன் காலமெல்லாம் வாழ்ந்த வீட்டில் நுழையக் கூடாது; நுழைந்தால் வீட்டிற்கு ஆகாது; இக்கருத்துப்பற்றியே பல சடங்குகள்—கருமங்கள் செய்யப் படுகின்றன. மரணத்திற்குப் பின் மனிதன் பேய்த் தேகம் எடுத்து விட்டான் என்பதும் நரக துன்பங்களை அந்த ஆவி அனுபவிக்கிறது என்பதும் தெரிகிறதல்லவா?

நித்திய நரகிற்குச் செல்லும் நுழைவாயிலாகிய மரணத்தை வென்று நித்திய மகிழ்ச்சியில் மனிதனை வாழ வைப்பதற்கே மதங்கள்—வேதங்கள்—உபநிசத்துகள் எல்லாம் வந்தன. மரணத்திற்குப் பின் வாய்க்கும் நித்திய நரகத் துன்பங்களை எடுத்துக் காட்டி இவற்றின் நுழைவாயிலாக விளங்கும் மரண பயத்தை ஊட்டி ஞானப்பயிர் ஏற்றுதற்கே

உலகில் அவதார புருடோத்தமர்கள் ஆங்காங்கு தோன்றினார்கள்.

முப்பதாண்டிற்கு மேலாகக் கண்ணபிரான் அவர்களுடன் நட்புரிமை கொண்டு பழகிய அருச்சுனனுக்கு விஸ்வரூப தரிசனை கிடைத்தது எப்போது? கௌரவர்களின் சேனை தன் முன்னே போர் புரிய அணிவகுத்து நின்றதைப் பார்த்த பிறகல்லவா கிடைத்தது? இத்தகு நெருக்கடியான போர்க் காலத்திலே-போர்க் களத்திலே அருச்சுனனுக்கு மட்டும் விஸ்வரூபம் ஏன் தரிசனை ஆயிற்று? போர் புரிய நிற்கும் காலத்திற்கு முன்பே கண்ணபிரான் அருச்சுனனுக்குக் கீதோபதேசம் தந்திருக்கலாமே! நிறைய வாய்ப்புகள் இருந்தனவே! இருந்தும் ஏன் அளிக்கவில்லை?

துவாபர யுகத்திலிருந்தும் கலியுகம் பிறந்ததிலிருந்தும் இவ்வினாவிற்கு விடை கூறுவார் எவருமிலர். கலிக்கடையில் தான் இவ்வினாவிற்கு விடைதந்தார் வந்தார்கள்.

ஆம்! ஞானம் பெறுவதற்கு மரணபயம் தேவை.பசித்தவனல்லவா உணவைப் புசிப்பான்? தாகமெடுத்தவனல்லவா நீர் குடிப்பான்? மரணத்திற்குப் பின் விளையும் கொடுங்கோர கடுங்கார முடிவே இல்லாத யுகங் கோடி நெடுங்கால நரக துன்பத்தினை நினைத்தே ஒரு மனத் துணிவாகச் சித்தர்,முத்தர், ஞானிகள் முதலானோர் மெய்ஞ்ஞான வாழ்வினைச் சிக்கெனப் பிடித்தார்கள். யுகங் கோடி கால வாழ்வினை நிறுவச் செய்யும் நூற்றாண்டுகால மனித வாழ்வில் என்ன துன்பம் வந்தாலும் சகிக்கொணா பொறுக் கொணாத் தொல்லைகள் வந்தாலும் அவற்றையெல்லாம் தாங்கி நின்றார்கள்; சாவோலையைக் கிழித்தெறியும் சற்குருவே கதியென உலக வாழ்வின் இறுதிக் கால வரையிலும் நிலைத்து நின்றார்கள்; இதன் காரணமாக மரண நுழை வாயிலில் புகாமல் தப்பினார்கள்; மரணமிலாப் பேரின்பச் சித்திப் பெருவாழ்விற்கு உரியவர்கள் ஆனார்கள்.

போரில் தோல்வி என்பதே அறியாத அருச்சுனன், எதிரிகளின் போர்க் கருவிகளால் நேரும் மரணத்தையும், அம்மர

ணத்திற்குப் பின் யுகங் கோடி காலங்களாக அனுபவிக்க இருக்கும் நித்திய நரக துன்பத்தினையும் கணநேரம் எண்ணிப் பார்க்கிறான்; எதிரிகளின் கணையால்-கண நேரத்திற்குள் நிகழும் மரணத்தால் ஏற்படும் முடிவில்லாத நரக துன்பம்அவன் உள்ளத்தையும் உடலையும் நடுங்க வைக்கிறது. வீர உணர்வு கொண்டவன் கோழையாகி விடுகிறான். உலகினர் புகழும் விழுப்புண்பட்டு நித்திய நரகத்திற்குச் செல்வதைக் காட்டிலும் காண்டீபத்தை எறிந்து விட்டுப் போர்க் களத்திலிருந்து சென்று விடுதல் நல்லது என்று எண்ணுகிறான். கோழை என்றும் போர்ப் படை கண்டு அஞ்சியவன் என்றும் தூற்றினும் தூற்றட்டும் என்ற துணிவு அவன் உள்ளத்தில் கணநேரத்தில் உதயமாகி விடுகிறது.

மரணபயம், மரணத்திற்குப் பின் அமைய இருக்கும் நரக பயம் அம்மாவீரனின் கரத்திலிருந்த காண்டீபத்தைப் பறித்து விடுகிறது. போரும் வேண்டாம், இவற்றால் வரும் மரணமும் வேண்டாம் என்ற எண்ணத்துடன் தேரினின்று கீழே இறங்கி விடுகிறான்.

அருச்சுனனின் மனோநிலையை-மரணத்தைத் தவிர்ப்பதற்காக உலகம் கோழை என்று சொன்னாலும் சொல்லட்டும் என்ற மனோநிலையைக் கண்ணபிரான் நன்கு பயன்படுத்திக் கொள்கின்றார்கள். ஒருமொழிக் கீதையாம் சொல்லொரு பொருளினாலே விஸ்வரூபத்தினை வெளியாக்கித் தரிசனைக்குக் கொண்டு வருகிறார்கள்.

அருச்சுனன் சில கண நேரங்களில் நடந்து முடிந்து விடுகின்ற இவ்வரிய விஸ்வரூபக் காட்சி-தம் தரிசனைக்கு வந்த பெறற்கரிய பேற்றை எண்ணிப் பேரானந்தம் கொள்கிறான்; தன் முன்னும் பின்னும் அணிவகுத்து நின்ற லட்சக் கணக்கான போர் வீரர்களுக்கு வாய்க்காத பேறு தனக்கு வாய்த்தது கண்டு இறும்பூதெய்துகிறான். "முப்பதாண்டு காலம் பழகியும் கண்ணபிரானை மதி நுட்பம் வாய்ந்த ராஜதந்திரி என்றல்லவா எண்ணி விட்டேன்? பாற்கடலில் பள்ளி கொள்ளும் மகாவிஷ்ணுவின் அவதாரமாகவல்லவோ இப்புருடோத்

தமர் விளங்குகிறார்? இவர்கள் அவதார புருடர் என்பது இப்போதல்லவா தெரிகிறது! இனி எனக்கென்ன பயம்? தொடங்க இருக்கும் இப்பாரதப் போரில் இக்கணமே புண்பட்டு உயிர் பிரிய நேர்ந்தாலும் அவ்வுயிர் எமன் கைவசப் படாமல், பரம பதத்திற்காளாக்கும் கண்ணபிரானாகிய தன் குருநாதரின் கையகத்தல்லவா ஆகப் போகிறது? இனி எதற்கும் எவர்க்கும் அஞ்சுவதும் இல்லை; அஞ்ச வருவதும் இல்லை; போருக்கஞ்சேன்; போரினால் வரும் மரணத்திற்கஞ்சேன்; எமனைக்கண்டு அஞ்சேன்; நரகத்தில் இடர்ப் படவு மாட்டேன்!'' என்ற எண்ணங்கள் அருச்சுனனின் உள்ளத்தில் ஒளிவிடுகின்றன. அவ்வளவுதான். மறுகணமே கீழ் நழுவிய காண்டீபம் அம் மாவீரனின் கரத்தினில் வந்தமர்ந்து ஓங்காரமிடுகிறது; உலகத்துச் சக்திகள் அனைத்தும் ஒன்று திரண்டு வந்து எதிர்த்து நின்றாலும் அவற்றை அழித்தொழிக்கும் பெருவீரம் பெற்றுப் பெருமிதத்தோடு நிற்கிறது. இதன் காரணமாக அருச்சுனனுக்குப் பாரதப் போரில் மட்டுமல்லாமல், எமபடரை மிகைத்து நிற்பதிலும் பெரு வெற்றி கைவரவாகிறது.

அருச்சுனனின் வாழ்க்கையிலிருந்து நாம் கற்றுக்கொள்ள வேண்டிய பாடம் இதுவேயாகும்.

துவாபர யுகத்தில் பிறந்த அருச்சுனனுக்கு மட்டுமே இந்த நிலை என்றெண்ண வேண்டாம். மனித உடல் எடுத்து விட்ட ஒவ்வொருவர் கதியும் இதுவேயாகும்.

கண்ணபிரானைப் போன்ற மெய்ந்நிலை கண்ட ஆசாரிய புருடோத்தமர்களை அடையாதவர்கள் எத்திற வல்லபம் வாய்ந்தவர்களாக இருப்பினும் அவர்கள் எமனுடைய மரண வலைக்குள் சிக்கி நரக வேதனை அனுபவித்தே தீர வேண்டும். இது எல்லா வேதங்களின் சட்டம்! உபநிசத்துக்களின் தீர்ப்பு! இதில் இருந்து எவரும் தப்பவே முடியாது.

ஆனால் இந்த இருபதாம் நூற்றாண்டில் அனைத்துச் சமயத்தைச் சார்ந்த மக்களில் எத்தனை பேர் மரணத்தைப் பற்றி நினைக்கிறார்கள்? மற்ற உயிர்களுக்கு வருவது போல் மனிதனுக்கு மரணம் வருவது இயற்கை என்று எண்ணுமளவிற்கு

இன்று காலம் சென்றுகொண்டிருக்கிறது. மரண பயத்தை மருந்திற்குக் கூட நினைவூட்ட நாதியே இல்லாத நிலையை எல்லாச் சமயவாதிகளிடமும் இன்று காண முடிகிறது.

உபநிசத்துக்களின் அடித்தள உயிராணிச் செயலாகிய எம பயத்தைக் கடத்திச் சாயுச்சிய பதமருளும் பேற்றை எவரும் எவர்க்கும் நினைவுகூரச் செய்வார் இல்லை.

இத்தகு அவல நிலையிலே, கலிக்கடையிலே, உபநிசத்துக்களின் தத்துவங்களை உயிராணிச் செயலாக எடுத்து வழங்கத் தம்மை நாடிவரும் அடியார்களுக்கு எமபடரின் அச்சத்தினைச் சதா காலமும் கிளப்பித் தடவி சன்னிதி இருத்தி வினு விடைகளின் மூலமாக மனித மேம்பாட்டினைத் தூண்டி இக் கடத்தை நீக்கி அக்கடத்துளாக்கும் முத்தி மழை பொழியத் தலையுக ஞானப் பயிர் ஏற்றுவதற்கு எம்மான் சாலை ஆண்டவர்கள் அவதாரம் செய்தார்கள். கல்கி மகதி ஆண்டவராக எல்லா மதங்கள், வேதங்கள், உபநிசத்துகள் இவற்றின் தத்துவங்களைச் செயலாக்கும் திறனைத் தம் கையகத்தடக்கி வந்தார்கள். ஆதலால் இக்கல்கி அவதாரக் கடவுளின் அங்கத்திலே ஒரு கூறாகிய 69 சாதிகளைச் சார்ந்த ஐயாயிரத்திற்கும் அதிகமான அங்கத்தவர்களுக்குச் சர்வ மதங்களின் ஆதாரத் தத்துவத்தினை உயிர்ப்பொருளாக உள்ளங்கை நெல்லிக் கனியாக ஈந்தார்கள். செயற்கரிய இப் பிரம்மவித்தைச் செயலால் கல்கி அவதாரக் கடவுளின் பிள்ளைகளாகிய மெய்வழிச் சபையினர் உள்ளங்களிலே சர்வ மதங்களும் ஒன்றென்று தழைத்தன; தெய்வம் ஒன்றென்று விளங்கின; நால்வகை வேதங்கள், பிரம்ம சூத்திரங்கள், உபநிசத்துகள் அனைத்தும் விடிந்தன; விளங்கின.

69 சாதிக்குள்ளிருந்த சைவர்கள் பஞ்சாட்சர ரூபியைத் தன் இதயலோகத்தில் பிரகாச ரூபமாகக் கண்ட மெய்யான சைவர்களானார்கள். வைணவர்கள் அட்டாச்சரப் பொருளைத் தம் இதய ஒளியில் கண்ட மெய்யான வைணவர்களானார்கள்; பிராமணர்கள் காயத்திரி தேவியைத் தம் இதயாசனத்தில் கோடி சூர்யப் பிரகாசத்துடன் தரிசித்த உண்மைப் பிரா

மணர்களானுர்கள்; இஸ்லாமியர்கள் தம் கல்பு பிரகாசமாகி அங்குக் கலிமாவை, மூன்று உலகங்களையும் சர்வ வேதங்களையும் வைத்து ஆளும் அரசு மாலியாகக் கண்ட பரிசுத்த இஸ்லாமியர்களானுர்கள்.

இப்பெறற்கரும் பேற்றைச் சுருக்கமாகச் சொல்ல வேண்டுமென்ருல் உலகம் தோன்றிய காலத்திலிருந்து அவ்வப்போது தோன்றிய அனைத்து வேதங்கள், உபநிசத்துக்கள் எல்லாம் மிகு பொலிவுடனும், புதுக் கருக்குடனும், வெகு கூருடனும் இன்று மெய்வழி அங்கத்தவர்களின் உள்ளங்களிலே உயிர்ப் பொருளாக விளங்கிக் கொண்டிருக்கின்றன.

கலியுகத் தெய்வமான கல்கி மகதி ஆண்டவர்களின் பேரிரக்கக்கத்தால் மெய்யான சைவராக்கப் பெற்றவர்களில் அடியேனும் ஒருவன். ஆண்டவர்களின் அங்கத்தில் ஒரு கூருக அடியேன் ஆகிய காலத்தில், என்பால் மண்டிக் கிடந்த தன்னறிவில் சாயும் புல்லறிவை அழித்தார்கள். எழுத்தே மந்திரம் என்று அழுத்தமாய்ப் பற்றி இருந்த புல்லறிவை அழித்தார்கள்; மெய்ச் செயலில்லா அற்பர்களையெல்லாம் ஞானவான்கள் என மதித்த புல்லறிவை அழித்தார்கள்; எம பயத்தை நினைக்காத புல்லறிவை எரித்து அழித்துப் புது அறிவை ஈந்தார்கள்; மணிவாசகப் பிரானவர்கள் பொன்னம்பல வாணரிடம் பெற்ற அறிவை ஈந்தார்கள்; "செத்திடமும் பிறந்திடமும் இனிச் சாவா திருந்திடமும் அத்தனையும் அறியும் அறிவை" ஈந்தார்கள்; அறிவாம் உயிர் ஒளிரும் திருத்தலத்தைக் காட்டினுர்கள்; எவர் உதவியும் வந்து எட்டித் தீண்ட முடியாத அந்த எமன் பதி எல்லையைத் தாண்டும் உபாயத்தை அறிவித்தார்கள்.

ஆண்டவர்கள் அளித்த அறிவின் துணைகொண்டே கடோபநிசத்தை மாணவர் உலகமும் புரிந்து கொள்ளும் நாடக வடிவிலே ஓரளவிற்கு எழுத முடிந்தது.

எமபடரின் நித்திய இருள் இருப்பிலிருந்து ஆயிரங்கோடி சூரியப் பிரகாசத்திற்கு அழைத்துச் செல்லும் வழிகாட்டியே உபநிசத்துகள்; சவக்குழி நோக்கிச் செல்லும் மனிதனைச்

சாயுச்சிய பாதைக்கு வழி கூட்டி நடக்க உதவுவதே உபநிசத்துகள்; நூற்றுண்டு கால அநித்திய வாழ்வுக்கு வந்த மனிதனுக்கு யுகங்கோடி கால சுவர்க்க பதி வாழ்வுக்கு வழிகாட்டுவனவே உபநிசத்துகள்; பிறவிப் பெருங்கடல் நடுவே கரையும் திசையும் காணுமல் தவிக்கும் கலங்களுக்கு ஒளி உமிழ்ந்து வழிகாட்டும் கலங்கரை விளக்குளே உபநிசத்துகள்.

இத்தகு உபநிசத்துக்களில் ஒன்ருக விளங்குகிறது கடோபநிசத்து. மரண பயத்தைத் தெளிவாக, திட்டவட்டமாக எடுத்துக் காட்டுகிறது. மரணத்தை வென்று வாழ்வதற்கு ஒவ்வொரு மனிதனின் கடத்துள்ளே (உடம்புள்ளே) விளங்கும் மெய்ப் பொருளை அறிய வேண்டும் என்பதை விளக்கிக் காட்டி அம்மெய்ப்பொருளே கடத்தைத் தாங்கி வரும் ஆசாரியனுக வருகிருர்கள் என்பதையும் காட்டி, அம் மெய்ந்நிலை கண்ட மெய்யான ஆசாரியரின் விருப்பத்திற்கு இலக்காகி நிற்க வேண்டும் என்பதையும் கடோபநிசத்து உறுதியுடன் கூறுகிறது.

"புகை இல்லாமல் பொன்னுெளியாகக் கட்டைவிரல் அளவில் இருதயக் குகையில் இறைமை விளங்குகிறது."

"நூல்களைக் கற்பதாலோ, நுண்ணிய அறிவாலோ, கேள்வி ஞானத்தாலோ கிட்டுவதில்லை பரம்பொருள். இதயக் குகையில் இலங்கும் இறைவன் எவரை விரும்புகின்ருனே அவருக்கே தன்னை வெளிப்படுத்திக் காட்டுகிருன்," என வரும் கடோபநிசத்தின் வாக்கியங்கள் மிக விளக்கமாக இறைமையைப் பற்றியும், அவ்விறைமையை அடையும் வழியைப் பற்றியும் கூறுகிறது.

நம் இருதயக் குகையில் அரூப வடிவாய்ப் பொன்னிற வண்ணத்துடன் இலங்கும் இறைவன் நம்மிடம் பேசுமா? பேசி நம் ஐயங்களை அகற்றுமா? அகற்ருது. ஏன்? நாம் இருப்பது தூலத்தில். அந்த இறைமைப் பொருளோ நம் தூலத்துக்குள்ளே சூக்கும வடிவாய் அருவமாய் இருக்கிறது. தவம், தியானம் செய்கிறேன் என்று தனிமையில் அமர்ந்து

எவ்வளவு காலம் பெரு முயற்சி செய்தாலும் நமக்குள்ளிருக்கும் மெய்ப் பொருளைக் காணமுடியாது. காணவே முடியாத போது நாம் அதனிடம் முறையிடவும் முடியாது; அது நம்மை விரும்பவும் முடியாது.

அரூபத்தில்விளங்கும் மெய்ப்பொருள் நாம் பார்க்க-பேச-கேட்க நம்மைப் போல் தூலமெடுத்துக் குருபரனாக வரல் வேண்டும். அன்னவர்கள் இரக்கத்திற்கு நாம் ஆளாகி நிற்க வேண்டும். அப்போதுதான் அன்னவர்கள் விருப்பம் நம்மிடத்துப் பாயும்.

மெய்ப் பொருளாகிய குருபிரானின் இரக்கத்தையும் விருப்பத்தையும் எவர் தம்பால் பாய வைத்துக் கொள்கிறாரோ அவரே மரணத்தை வென்று நிற்பார்; அவர்களுக்கே மரணமில்லாப் பெருவாழ்வு கிட்டும்.

நம்முளே விளங்கும் எமன்பதி எல்லையில் பாய்ந்து எமபடரைச் சாய்க்க வல்ல ஆற்றலைக் கைக்கொண்டு தூலத் திருமேனி தாங்கி வரும் மெய்யான குருபிரானுக்கு மட்டுமே எமன் அஞ்சி விலகுவான். இவர்களைத் தவிர வேறு எத்திற வல்லபங்கள் பெற்ற எவர்க்கும் எமன் அஞ்சான். இது எல்லா வேதங்களின் மாற்றமில்லாச் சட்டம்! தீர்ப்பு!

ஏன் ஒவ்வொருவருக்கும் மரணம் வருகிறது? எப்படி வருகிறது? மரணத்திற்குப் பின் ஆவி (உயிர்) அடையும் நிலை எத்தன்மையது? மரணத்தினால் உடலை விட்டுப் பிரியும் உயிர் மீண்டும் ஒரு மனித உடலை எடுக்குமா? எடுக்காமலே போய் விடுமா? அப்படி எடுப்பதற்குரிய இடைவெளிக் காலம் எவ்வளவு? மரணத்தைத் தடுப்பதற்குரிய வழிகள் யாவை?

இவை அனைத்தும் சிக்கலான வினாக்களே! ஆனால் இவ் வினாக்கள் அனைத்திற்கும் மிகத் தெளிவான விடை கூறுகிறது கடோபநிசத்து.

ஒவ்வொரு மனிதனுக்கும் இறுதியில் வரும் மரணக் குளிரைப் போக்க, கபக்கடலை வற்றடிக்க "நசிகேதாக்கினி"யை நல்கி இருக்கிறது கடோபநிசத்து.

ஆம்! வாஜசிரவஸ் என்ற கிரகத்தாச்சிரம ஒழுக்கத்தில் விளங்கும் பெரியாரின் ஒரே மகனான நசிகேதஸ் என்னும் இளைஞன் இளமையிலேயே மரணத்தை வெல்வதாகிய ஞான வேட்கையோடு இருக்கிறான். தந்தையார் கொடுத்து விட்ட வாக்கினால் நசிகேதஸ் எமன் பதிக்கே சென்று மரண ரகசியங்களை அறிந்து அம்மரணத்தை வெல்வதற்குரிய நசிகேதாக்கினியை—பிரம்ம வித்தையைத் தெரிந்துகொண்டு வருகிறான்.

ஞான வேட்கை கொண்ட ஓர் இளைஞனின் அற்புதமான வாழ்க்கை! இன்றைய மாணவர்கள், இளைஞர்கள் அனைவரும் படித்துப் பார்த்துச் சிந்தனை செய்ய வேண்டிய நூல் இது.

மற்ற உயிரினங்கள் மடிவன போல மனிதனுக்கு வரும் மரணமும் இயற்கையே என்னும் கருத்து எல்லார் உள்ளங் களையும் இன்று ஆட்சி புரிகிறது. இதனால் உயிரின் உன்னதம் தெரியாமல், அற்ப காரணங்களுக்கெல்லாம் உயிரை அழிக் கும்—அழித்துக் கொள்ளும் கொடுமை இன்று மிக வேகமாகப் பரவி வருகிறது; எல்லாத் துறைகளிலும் ஒழுக்கம் மிக வேகமாகச் சிதைந்து வருகிறது.

பண்டைக்கால யோகிகள், ஞானிகள், சித்தர்கள் போன்றோர் காட்டிய வழிகளால் மட்டுமே இவற்றைத் தடுத்து நிறுத்த முடியும்; வேறு எவ்வழிகளாலும் இவற்றைத் தடுத்து நிறுத்த முடியாது

ஆகவே, உயிரின் உயரிய உன்னதத்தை விளக்கும் கடோபநிசத்தை இளஞ்சிறார்களும் புரிந்துகொள்ளவேண்டும் என்பதற்காகச் சிறு நாடக வடிவில் இந்நூல் வெளி வருகிறது.

"எம பயத்தைத் தாண்டாத எவ்வாழ்வும் வாழ்வுமல்ல
எம பயத்தைக் கடந்திடிலோ எவ்வாழ்வும் வாழ்வாகும்"

என்று பாட்டுகள் பாடிக்காட்டி, மனித தூலத்தின் அணுக் கோடியிலும் நிறைந்த அந்த ஆதி வஸ்துவைத் தூலத்தி லிருந்து அணுவணுவாகப் பிய்க்கும் வல்லமை வாய்ந்த சக்தி

யாகிய எமபடரைச் சதாகாலமும் நினைவுறச் செய்து அதை வெல்லும் உபாயத்தினையும் ஈந்த எம்மான் சாலை ஆண்டவர்களின் அருளால்தான் கடோபநிசத்தின் கருத்துக்களை அடியேன் ஒருவாறு புரிந்துகொள்ள முடிந்தது.

இதன் விளைவாகவே இன்று நாடக வடிவிலே "மரணத்திற்குப் பின்" என்னும் தலைப்பினைத் தாங்கி இந்நூல் வெளிவருகிறது.

மிக்க வயதான காலத்தும் சிரமம் கருதாமல் இந்நூலுக்கு அணிந்துரை வழங்கிய மெய்வழிச் சபை அங்கத்தினரும், மெய்வழிச்சபை முன்னாள் பொருளாளரும், முன்னாள் மிட்லண்ட் இன்சூரன்ஸ் கம்பெனியின் உரிமையாளருமாகிய மெய்வழி ராஜன் அனந்தர் அவர்கட்கு என் நன்றி என்றும் உரியதாகும்.

இந்நூலினை அழகுற அச்சிட்டு வெளியிடும் நற்பணியினைச் செய்து முடித்த செல்வன் பதிப்பகத்தார்க்கு என் நன்றி என்றும் உரியதாகும்.

இந் நாடகத்தினை முதலில் ஒலி பரப்பிய புதுவை வானொலி நிலையத்தார்க்கும், நிகழ்ச்சி அமைப்பாளர் பன்மொழிச் செல்வர் உயர்திரு T. V. R.சாரி, M. A, அவர்களுக்கும், என் நன்றி என்றும் உரியதாகும்.

61, ஆஞ்சநேயர் கோவில் வீதி
நாட்டேரி அஞ்சல்
வ. ஆ. மா.—632511
18- 12- 81

மெய்வழி
சோமசுந்தரம் செட்டியார்
(வித்துவான்
கெ. சி. சோமசுந்தரம்)

# மரணத்திற்குப் பின்

## காட்சி - 1

(ஆசிரமத்தில் கல்வி பயிலும் உடன் பிறந்தார் இருவர், வாஜசிரவஸ் என்பவர் செய்ய இருக்கும் "விஸ்வஜித்" யாகத்தைப் பற்றிப் பேசுகிறார்கள். அப்போது வாஜசிரவஸ் ஒரே மகன் நசிகேதஸ், யாகத்தில் கலந்து கொள்ள அவர்களை அழைக்கின்றான்.)

அண்ணன் : ஒரு செய்தி கேள்விப்பட்டாயா?

தம்பி : என்ன அண்ணா? என்ன செய்தி?

அண் : நம்ம வாஜசிரவஸ் இருக்காரே! அவர் ஒரு பெரிய யாகம் செய்யப் போறாரு...தெரியுமா?

தம்பி : வாஜசிரவஸ் யாகம் செய்யப் போறாரா? என்ன யாகம்? கொஞ்சம் விளக்கமாகச் சொல்லுங்களேன்.

அண் : "விஸ்வஜித்" யாகம் செய்யப் போறார்!

தம்பி : "விஸ்வஜித்" யாகமா? அந்த யாகத்தைச் செய்யற வங்க பொன்னையும் பொருளையும் நிறையத் தானம் செய்யணுமே?

அண் : ஆமாம்! வாஜசிரவஸ் தாம் சம்பாதித்த பொருள் அனைத்தையும் தானம் செய்ய வேண்டும் என்பதற்

காகவே "விஸ்வஜித்" யாகம் செய்யப் போகிறதா கேள்வி.

தம்பி : பரந்த மனப்பான்மை, சிறந்த நோக்கம், உயர்ந்த குறிக்கோள், மாரியெனப் பொருள்களை வாரி வழங்கும் வள்ளல் தன்மை ஆகிய இவைகள் எல்லாம் உடையவர்களே இந்த யாகத்தை வெற்றி கரமாகச் செய்து முடிப்பார்கள் என்று சொல்லக் கேள்விப்பட்டிருக்கிறேன்.

அண் : அது மட்டுமல்ல! அழியா வாழ்வை அடையவே இந்த யாகத்தை விதித்திருக்கிறார்கள். யாகத்தைத் தொடங்கி முடிப்பதற்குள்ளாகவே தாம் ஈட்டிய செல்வங்கள் அனைத்தையும் அவர் தானம் செய்ய வேண்டும். அப்போதுதான் அந்த யாகத்தின் முழுப் பலனை அவர் அடைய முடியும். இதில் சிறிது தவறி னாலும் அவர் இலட்சியம் கைகூடாமல் போய்விடும்.

தம்பி : அப்படி என்ன தவறு இதில் நேர்ந்து விடப் போகிறது?

அண் : "பாத்திரம் அறிந்து பிச்சை இடு" என்பது பழ மொழி அல்லவா? தக்க பொருள்களைத் தகுதி இல்லாதவர்க்குக் கொடுத்தாலும், தகுதியற்ற பொருள்களைத் தக்கவர்க்குக் கொடுத்தாலும் நன்மை இல்லை என்பது மட்டுமல்ல; யாகத்தின் பயனும் கிட்டாமல் போய்விடும்.

நல்ல பொருள்களைத் தீயவர்களுக்குக் கொடுத் தால் அவை தீய செயல்களுக்குத்தான் பயன்படும். ஒன்றுக்கும் பயன்படாத பொருள்களை நல்லவர் களுக்குக் கொடுத்தால் அவர்கள் மனம் வருந்தும் அல்லவா? புண்ணியங்களைத் தேடிக் கொள்ள வேண்டும் என்று எண்ணிச் செய்யும் செயலில்

நல்லவர்களின் அதிருப்தியைத் தேடிக் கொள்ளக் கூடாது. இப்படித் தேடிக் கொண்டால் யாகம் செய்வதன் பயன் இல்லாமல் போய்விடும்.

**தம்பி :** வாஜசிரவஸ் மனம் போலவே அவர் செய்யப் போகும் யாகமும் வெற்றிகரமாக முடிய வேண்டும்.

**அண் :** அவர் பெயரே வாஜசிரவஸ் என்பதாயிற்றே! வாஜம் என்ருல் என்ன அர்த்தம் தெரியுமா? அன்ன தானம் செய்து அழியாப் புகழைத் தேடிக் கொண்டவர் என்று அர்த்தம். தம் பெற்ருேர்கள் இடுகுறியாக இட்ட பெயரை இவர் இந்த யாகத்தைச் செய்வதன் வாயிலாகக் காரணப் பெயர் ஆக்கிக் கொள்கிருர் போலும்.

**தம்பி :** ' ஏழைகளை அழிக்கும் பசியைப் போக்கினுல் அது அவன் பிற்காலத்தே ஆக்கம் பெறும் பொருட் குவியலைச் சேர்த்து வைத்தாற் போன்றதாகும்'' என்ற கருத்தமைந்த ''அற்ருர் அழிபசி தீர்த்தல் அஃதொருவன் பெற்ருன் பொருள் வைப்புழி'' என்ற பொய்யாமொழியின் உண்மையை வாஜ சிரவஸ் நன்ருக உணர்ந்தவர்.

**அண் :** ஈத்துவக்கும் இன்பத்தை அறியாதவர்களால் இந்த யாகத்தைச் செய்யவும் முடியாது; தாம் ஈட்டிய பொருள் அனைத்தையும் தானம் செய்யவும் முடியாது. வாஜசிரவஸ் மட்டும் உயர்ந்த இலட்சியம் உடையவர் என்று எண்ணி விடாதே. அவர் மகன்...?

**தம்பி :** யார், நசிகேதஸா?

**அண் :** ஆம்! நசிகேதஸ் தன் தந்தையைக் காட்டிலும் சிறந்தவன். எந்த வகையிலும் தன் தந்தைக்குக் குறைந்தவன் அல்லன். இந்தச் சிறு வயதிலேயே மெய்ஞ்ஞானம் அடைய வேண்டும் என்ற வேட்கை இவ்வளவு அவ்வளவு என்று சொல்லி முடியாது.

தம்பி : 'தந்தை அறிவு மகனுக்கு' என்ற பழமொழி பொய் யாகி விடுமா?

அண் : நூற்றுக் கணக்கான ஆஸ்ரமவாசிகள் வாழும் இந்தக் காட்டகத்தே நசிகேதஸ் கேட்கும் வினாக்களுக்கு விடை கூறுவார் யாருமே இல்லை.

தம்பி : அவன் வினாக்களுக்கு விடையளிப்பார் யாருமே இல்லையா? ஆச்சரியமாக இருக்கிறதே!

அண் : ஆச்சரியம்! ஆனால் உண்மை! மெய் வேட்கை கொண்டு அலையும் அவனைப் போன்ற ஒரு சிறுவனை நான் இதுவரை கண்டதே இல்லை. இந்தச் சின்னஞ் சிறு பிராயத்திலேயே தடுக்க முடியாத ஞான வேட்கை அச்சிறுவன் உள்ளத்திலே இராப்பகலாகக் கொழுந்து விட்டெரிகிறது. வயதிலும், அனுபவத் திலும், தபோபலத்திலும் எவ்வளவு பெரியவர் களாகஇருந்தாலும் நசிகேதஸின் எதார்த்த உள்ளத் தில் இருந்து பீரிட்டுக் கொண்டு வரும் ஞானத் தொடர்பான வினாக்களுக்கு விடை சொல்லத் தெரியாமல் விழித்த பலரை நான் பார்த்திருக் கிறேன். அந்த இளம் பிஞ்சு உள்ளத்தில்தான் எவ்வளவு ஆராய்ச்சி! எவ்வளவு வேட்கை! ஐயங் களைத் தீர்த்துக் கொள்ள வேண்டும் என்ற ஆவல் தான் எவ்வளவு! அப்பப்பா...அற்புதமான சிறுவன்! தந்தையார்க்கேற்ற தனயன்...அடே ..டே...அதோ பார்...நாம் யாரைக் குறித்துப் பேசிக் கொண் டிருக்கிறோமோ அந்த நசிகேதஸ் நம்மை நோக்கி விரைந்து வருவது போலல்லவா தெரிகிறது. இன்னும் சிறிது நேரத்தில் எப்படிக் கேள்விக் கணைகள் அந்த எதார்த்த உள்ளத்தில் இருந்து வருகின்றன என்பதைப் பாரேன்.

(அப்போது நசிகேதஸ் இவ்விருவர்களிடம் வந்து சேர்கின்றான்.)

அண் : நசிகேதஸ்! ..வர வேண்டும். வர வேண்டும். தந்தை யார் நலம்தானே?

நசிகேதஸ் : நலமாக இருக்கிறார்.

அண் : இப்போதுதான் உன்னைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். சொல்லி வைத்தாற்போல் நீயே வந்து விட்டாய். தந்தையார் மனம் போலப் பல்லாண்டு வாழ வேண்டும்.

நசி : அப்போ... பல்லாண்டுகளுக்குப் பிறகு...? (இருவரும் விழிக்கிறார்கள்...) உம். ஏன் மௌனமாய் இருக்கிறீர்கள்? நான் பல்லாண்டு வாழ வேண்டுமென வாழ்த்தினீர்கள். அதன்பின் மரணமடையவேண்டும் என்பதல்லவா உங்கள் எண்ணம்.

அண் : நசிகேதஸ்!... அப்படி எங்காவது நாம் நினைப்போமா? பல்லாண்டு வாழ்க என வாழ்த்துவது இவ்வுலகின் உபசார வழக்குதானே! அதன்படியே நாம் வாழ்த்தினோம்.

நசி : உலக உபசார வழக்காகட்டும்! இலக்கண இலக்கிய வழக்காகட்டும். மிருகங்களைப் போல மனிதனும் எமன் வசப்பட்டுச் சாகத்தான் வேண்டும் என்றால் மனிதனுக்கும் மிருகத்திற்கும் என்ன வேறுபாடு இருக்கிறது. ஒரு வேறுபாடும் இல்லையே! மாக்கள் இறப்பதைப் போல மக்களும் முடிவில் இறக்கிறார்கள் என்றால் மக்கட் பிறப்பு எதற்காக எடுக்க வேண்டும்?

அண் : நசிகேதஸ்! மக்களுக்கும் மற்ற உயிர்களுக்கும் உள்ள வேறுபாட்டை உணர்த்தி மக்களை நித்திய வாழ்விற்குக் கூட்டிச் செல்லவே எல்லா வேதங்களும், பிரம்ம சூத்திரங்களும், மதங்களும், சமயங்களும் வந்தன என்பதை நீ கேள்விப்படவில்லையா?

நசி : இதைப் போல் எவ்வளவோ செய்திகள் பலரிட மிருந்து நான் தெரிந்து கொண்டிருக்கின்றேன். ஆனால் நான் கேட்கும் வினாக்களுக்குத்தாம் சரியான விடைகள் தெரிந்து கொள்ள முடியவில்லை.

அண் : உன்னுடைய வினாதான் என்ன?

நசி : இந்த வேதங்களை யெல்லாம் கற்று ஓதுவதால், நமக்கெல்லாம் இறுதிக் காலத்தில் வருகின்ற எமனைத் தடுத்து நிறுத்திவிட முடியுமா? முடியும் என்றால் அதை எனக்குத் தாங்கள் தெளிவாகச் சொல்ல வேண்டும்!

அண் : உன் ஐயங்கள் அனைத்திற்கும் வேதங்களில் தெளிவான விடை இருக்கிறது.

நசி : வேதங்கள் எங்கு இருக்கின்றன? எப்படி இருக்கின்றன? சொல்ல முடியுமா?

அண் : ஏட்டுச் சுவடிகளில்...எழுத்து வடிவங்களில் இருக்கின்றன.

நசி : அந்தச் சுவடிகளில் உள்ள எழுத்துக்களுக்கு உயிர் உண்டா?

அண் : ஓலைச் சுவடிகளில் உள்ள எழுத்துக்களுக்கு உயிர் எப்படி இருக்க முடியும்?

நசி : ஏட்டில் உள்ள உயிர் இல்லாத மந்திரங்கள் இந்தக் கூட்டில் உள்ள உயிரை எப்படி எமனிடம் செல்லாமல் காக்க முடியும்? இதுதான் என் முதல் கேள்வி. நாம் ஏன் பிறந்தோம்? நம் கதி முடிவில் என்னவாகிறது? மனிதனுக்கு மரணம் ஏன் வருகிறது? மரணத்திற்குப் பின் நாம் அடையும் நிலை என்ன? மரணத்தை இப்பிறப்பிலேயே நாம் வெல்லமுடியுமா? வேதங்கள் மரணத்தை வெல்லத் துணை செய்கின்றன என்று கூறுகிறீர்கள். இதனை எனக்கு நிரூபித்துக் காட்ட

முடியுமா?...இப்படிப்பட்ட வினாக்கள் என் உள்ளத்தைச் சதா சர்வ காலமும் குடைந்த வண்ணம் இருக்கின்றன. இக் கானகத்தில் உள்ள எல்லா ஆசாரியர்களிடத்தும் இவ் வினாக்களைக் கேட்டு விட்டேன். இதுவரை எவரிடமிருந்தும் இவற்றிற்குத் தக்க விடைகள் பெறவில்லை. நாளாகவாக விடை கிடைக்காமலேயே என் ஆயுள் மற்றவர்களைப்போல முடிந்து விடுமோ என்று அஞ்சுகின்றேன். கலையிலே வல்லவர்கள், கருணை உள்ளம் கொண்டவர்கள், சாத்திரம் கற்றவர்கள், தான தர்மம் செய்தவர்கள் எல்லோரும் தம் இறுதி நாட்களில் அறிவிழந்து கரணமெலாம் கலங்க உயிரை விடுகின்ற காட்சிகளைக் கண்டு அதிர்ச்சி அடைந்து கொண்டு வருகின்றேன். இதே வழியில் எமன் என்னைச் சந்திக்க என்று வந்து விடுவானோ என்று கணந்தோறும் நான் வருத்தத்தில் மூழ்கிக் கொண்டிருக்கிறேன்.

அண் : நசிகேதஸ்!...வேதசாஸ்திரங்களில் மூழ்கித் திளைக்கும் வேத விற்பன்னர்களுக்கே இப்படிப்பட்ட மரண பயம் வந்ததை நான் கண்டதில்லை. உமக்கு இந்த மரண பயம் வந்துவிட்டது என்றால் மெய்ஞ்ஞானம் உம்மைத் தேடி வரும் காலம் வந்து விட்டது என்பதை நான் உணர்கிறேன். நசிகேதஸ்!... களங்கமற்ற தெளிவான, உறுதி மிக்க எதார்த்த உள்ளத்தில் எழும் உம் வினாக்களுக்கெல்லாம் சரியான விடை கிடைத்தே தீரும். நீர் தட்டிக் கொண்டே இருக்கிறீர்கள். கதவுகள் திறக்கப்படத்தான் போகின்றன. நீர் தேடிக் கொண்டே இருக்கிறீர்கள். மெய்யைக் கண்டு அடையத்தான் போகிறீர்கள். நசிகேதஸ்! அருச்சுனருக்குக் கண்ணபிரான் எப்போது விஸ்வரூபம் காட்டி அருளினார்கள் தெரியுமா?

நசி : கௌரவர்களை எதிர்த்துப் போராடக் கூடிய போர்க் களத்திலே...,

அண் : இதை இன்னும் விளக்கமாகச் சொல்ல வேண்டு மானால் அருச்சுனர் தம் எதிரிப் படைகளின் அணி வகுப்பில் இருந்த ஆசார்யர்களையெல்லாம் பார்த்து அவர்களால் தமக்கு மரணம் வந்துவிடுமே என்ற பயம் ஏற்பட்ட பின்னர்தான் கண்ணபிரான் முன் னிலையில் விஸ்வரூபம் தரிசனைக்கு வந்தது; காண்டீ பமும் கைவரவாயிற்று. ஸ்ரீ பரந்தாமர் சன்னிதியில் அருச்சுனருக்கு விஸ்வரூபம் வெளியாகித் தரிசனைக்கு வரும்வரையில் மரண பயம் நீங்கவே இல்லை. நசிகேதஸ்! இதுதான் மனித உடல் எடுத்த ஒவ்வொரு வர் கதியும். இந்தச் சிறுவயதிலேயே மெய்ஞ்ஞானத் தைத் தேடி அடைய வேண்டும் என்ற உம் வேட் கையைக் கண்டு நான் பேரானந்தப் படுகிறேன். உன்னை மகனைப் பெற்ற வாஜசிரவஸ் பெரும் புண்ணியவான். நீர் வாழ்க! நும் ஐயமெல்லாம் நீங்கி, மரணமில்லாப் பெருவாழ்வு உமக்கு நிச்சயம் கைவல்யமாகும். உமக்குச் சர்வ மங்களம் உண்டா கட்டும்.

நசி : உங்கள் வாழ்த்து என் வாழ்வில் பலிதமாகட்டும். நான் உங்களிடம் வந்த வேலையை மறந்தே விட்டேன். என் தந்தையார் நடத்தும் யாகத்திற்கு நீங்கள் இருவரும் அவசியம் வந்தருள வேண்டும்.

இருவரும் : அவசியம் வருகிறோம்.

## காட்சி-2

(வாஜசிரவஸ்ஸும் நசிகேதஸ்ஸும் யாக சாலையில் தானங்கொடுக்க இருக்கும் பொருள்களைப் பற்றிப் பேசுகின்றார்கள்.)

நசிகேதஸ்: (பசுக்கூட்டத்தைப் பார்த்து) அப்பா... இதெல்லாம் என்ன?

வாஜசிரவஸ்: மகனே! இன்று நடத்த இருக்கும் யாகத்தின் பொருட்டுத் தானம் செய்வதற்காக நம் ஆஸ்ரமத் தொழுவத்தில் இருக்கும் பசுக்கள்.

நசி : அப்பா... இவைகளையா நீங்கள் தானம் செய்யப் போகிறீர்கள்?வியாதியால் பீடிக்கப்பட்ட பசுக்கள்-வயதான கிழடு தட்டிப்போன பசுக்கள்-இவைகள் தாமே அதிகமாக இருக்கின்றன! நீங்கள் இவற்றைத் தானமாகக் கொடுத்தாலும் வாங்கிச் செல்பவர்களுக்குப் பயன்படாதே அப்பா! இவற்றைக் கொடுத்துத்தான் என்ன பயன்?

வாஜ : நசிகேதஸ்... நீ அறியாத சிறுவன். உனக்கொன்றும் தெரியாது.

நசி : அப்பா! நீங்கள் செய்வது எனக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. தண்ணீர் வைத்தாலும் குடிக்க முடியாத பசுக்கள்,புல்லரிந்து போட்டாலும் தின்ன முடியாத பசுக்கள், கறவைக்குத் தகுதி இல்லாத பசுக்கள் கன்றுகள் இவைகளைத் தானப் பொருள்களாகத் தர உங்கள் மனம் எப்படியப்பா துணிந்தது? தானத்தை

ஏற்றவர்கள் மகிழ்ந்தால்தானே அதன் பயன் நம்மைச் சாரும்? மாருக வருந்திஞல் நமக்குப் பயன் உண்டா? குளிக்கப்போய்ச் சேற்றைப் பூசிக் கொண்டது போல் அல்லவா உங்கள் செயல் இருக்கிறது? அப்பா...வேண்டாம் இந்தக் கிழட்டுப் பசுக் கூட்டங்கள்.

வாஜ : (கோபமாக) நசிகேதஸ்...உன் சிறுபிள்ளைத்தனத்தை என்னிடம் காட்டாதே. எதை எப்படி யாருக்குக் கொடுக்க வேண்டும் என்பது எனக்குத் தெரியும். நீ அப்பால் விலகிப் போ. நான் செய்வதில் குறுக்கிடாதே...

(நசிகேதஸ் மன வருத்தமுடன் அப்பால் விலகிச் சென்று நிற்கின்ருன்.)

## காட்சி—3

(வாஜசிரவஸ் 'விஸ்வஜித்' யாகம் செய்கின்றார். அந்தணர்கள் வேதமோதுகிறார்கள். வந்தவர்களுக்கெல்லாம் வாஜசிரவஸ் பசுக்களைத் தானமாகக் கொடுக்கிறார்.)

அந்தணர்கள் : (ஒரே குரலில் கீழ்வரும் வேதங்களை ஓதுகின்றார்கள்.)

"விச்வம் தர்பண தருச்சய மான—நகரீ
துல்யம் நிஜாந்தர்கதம் பச்யந்நாத் மணி
மாயா பஹிரி வோத் பூதம் யதா நித்ரயா
ய:ஸாக்ஷாத் குருதேப்ரபோத ஸமயேஸ்வராத்மான;
மேவாத் வயம் தஸ்மை ஸ்ரீகுரு மூர்த்தயே நம:
இதம் ஸ்ரீ தக்ஷிண மூர்த்தயே!"

வாஜசிரவஸ் : (அந்தணர் ஒருவரிடம்) சுவாமி! இப்பசுவைத் தாங்கள் தானப் பொருளாக ஏற்றருள வேண்டும்.

தானம் பெறுவோர் : வாஜசிரவஸ்!...உமக்குச் சர்வ மங்களமுண்டாகட்டும்.

வாஜ : (மற்றொருவரிடம்) இவ்வடியவனுக்கியன்ற பொருள் இது. ஏற்று அருள் செய்ய வேண்டும்.

தானம் பெறுவோர் : வாஜசிரவஸ்! உம் மனம் போல் தழைத்து நீடூழி காலம் வாழ்வீராக.

வாஜ : (மற்றொருவரிடம்) சுவாமி... தாங்கள் விரும்பிய இப்பொருளை ஏற்றருள வேண்டும்.

தானம் பெறுவோர் : வாஜசிரவஸ்! நீர் செய்யும் இந்த வேள்வி வெற்றி பெறுவதாக...சர்வ மங்கள முண்டாகட்டும்.

(இதையெல்லாம் கண்டுகொண்டிருக்கும் நசிகேதஸ் பின் வருமாறு தனக்குள் கூறிக்கொள்கின்றான்.)

நசிகேதஸ்: (தனிமொழி) தெய்வமே! அப்பாவுக்குகென்னபுத்தி பேதலித்து விட்டதா? நம்மை ஒரு பொருட்டாக மதித்து வந்த அந்தணர்களுக்கெல்லாம் கிழட்டுப் பசுக்களையும் மற்றபொருள்களையும் இப்படித்தானம் கொடுத்துக் கொண்டிருக்கிறாரே! இப்படிச் செய்து இவர் அடையப் போகும் பயன் ஒன்றும் இல்லையே! இதை நான் மனமாற அறிந்தும் சும்மா இருக்கலாமா? தானம் என்றபெயரால் தகுதியற்றபொருள் களை இப்படிக் கொடுத்துக் கொண்டிருக்கிறாரே! இதனை எப்படியாவது தடுத்து நிறுத்த வேண்டும்! ஆம்! இதற்கு ஒரே வழிதான் இருக்கிறது. அதை இப்போதே செய்து பார்த்துவிட வேண்டியதுதான். முயன்று பார்க்கிறேன்.

(தன் தந்தையாரிடம் செல்கின்றான்.)

நசி: அப்பா! இப்படி எல்லாவற்றையும் மனமுவந்து தானம் கொடுக்கிறீர்களே! என்னை யாருக்கப்பா தானம் செய்யப் போகிறீர்கள்?

வாஜ : சுவாமி...பெற்றுக்கொண்டீர்களா? நல்லது. போய் வாருங்கள்.

நசி : அப்பா! நான் சொல்வது உங்கள் காதில் விழ வில்லையா? என்னை யாருக்கப்பா தானம் செய்யப் போகிறீர்கள்?

வாஜ : இன்றுபோல் என்றும் வாழ்க என வாழ்த்திய வாழ்த் தினைக் கேட்டு அகம் மிக மகிழ்ந்தேன்.

தானம் பெற்றவர் : வாஜசிரவஸ்! தங்கள் யாகம் வெற்றி பெற வாழ்த்துகிறேன்.

நசி : (சலிப்புடன்) அப்பா...அப்பா.. நான் எத்தனைமுறை சொன்னாலும் காதில் வாங்கிக் கொள்ளாமல் இருக்கிறீர்களே! அப்பா என்னை யாருக்குத் தானம் செய்யப் போகிறீர்கள்?

வாஜ ; (கோபமாக) யாருக்கா? எமனுக்கு உன்னைத் தானமாகக் கொடுக்கிறேன்...போதுமா?

நசி : (எண்ணியது பலித்தது என்ற மகிழ்ச்சியில்) ஹா... ஹா....ஹா...அப்பா! இப்போது நீங்கள் என்ன கூறினீர்கள் என்பதைச் சிந்தித்துப் பார்த்தீர்களா?

வாஜ : (திடுக்கிட்டு) ஆ...மகனே!...நசிகேதஸ்! நான் என்ன கூறிவிட்டேன்?...எமனுக்கல்லவா உன்னைத் தானம் கொடுத்ததாகச் சொல்லிவிட்டேன். ஐயோ! நசிகேதஸ்! ஆத்திரத்தில் அறிவிழந்துவிட்டேன்...யாகத்தில் சொன்னதைக் கொடுத்தாக வேண்டுமே! எமனுக்கல்லவா கொடுப்பதாகச் சொல்லி விட்டேன்! இனி நான் என்ன செய்ய முடியும்? என் குலத்தை விளக்க வந்த நசிகேதஸ்!

நசி : அப்பா! அமைதியாக இருங்கள்! இப்போது என்ன நடந்து விட்டது? எதற்காக இப்படி அழுது புலம்புகிறீர்கள்?

வாஜ : குழந்தாய்! உன்னை எமனுக்கல்லவா தானம் செய்வதாகச் சொல்லிவிட்டேன்? நான் மனம் கலங்காமல் இருக்க முடியுமா?

நசி : அப்பா! என் மனக்குறையைப் போக்கிவிட்டீர்கள். தகுதியற்ற பசுக்களையும் பொருள்களையும் தக்கவர்களுக்குத் தானம் கொடுத்துக் கொண்டிருக்கிறீர்களே என்று வருந்திக் கொண்டிருந்தேன். என் வயிற்றில் பாலை வார்த்து விட்டீர்கள். என்னை எமனுக்குத்

தானம் கொடுத்ததன் மூலம் யாகத்தின் முழுப் பலனையும் நீங்கள் பெறுவீர்கள்.

**வாஜ :** நசிகேதஸ்!...என்ன உளறுகிறாய்?

**நசி :** அப்பா...இப்போது என்னை எமனுக்குத் தானம் செய்வதாக வாக்குக் கொடுத்து விட்டதால் இப்படிப் புலம்புகிறீர்கள். என் ஆயுட்காலம் முடியும் போது, பாசக் கயிற்றோடு, எவர் உதவியும் வந்து எட்டித் தீண்ட முடியாதபடி என் முன்னே வந்து நிற்கப் போகிறானே எமன்! அப்போது என்ன செய்வீர்கள்? அப்போது வரும் அந்த மறலியை உங்களால் தடுத்து நிறுத்த முடியுமா?

**வாஜ :** நசிகேதஸ்! வீண் வாதம் செய்து என் கவலையை இன்னும் அதிகப்படுத்தாதே!

**நசி :** வீண்வாதம் அல்ல அப்பா நான் கூறுவது! மிக மிகத் தெளிவான, உறுதியான, திட்டவட்டமான வினவைக் கேட்கிறேன். எவர் உதவியும் வந்து எட்டித் தீண்ட முடியாத பேராற்றல் படைத்த எல்லையல்லவா அந்த எமன் பதி எல்லை! அந்த எல்லைக்கு அந்த நாளில் நீங்கள் வரமுடியுமா? அல்லது நீங்கள் வாயால் சொல்லும் மந்திரங்கள்தாம் வருமா? சொல்லுங்கள் அப்பா! நீண்ட நாட்களாக என் உள்ளத்தை வாட்டி வதைத்துக் கொண்டிருந்த கேள்வி இது. இதைப் பலரிடமும் வினவினேன். விடை கிடைக்கவில்லை. இப்போது உங்களைக் கேட்டாலும் விடை கிடைக்காது என்பது எனக்குத் தெரியும். தந்தையே! உலகில் கணந்தோறும் கோடிக் கணக்கான உயிர்கள் பிறக்கின்றன. அதே போல அழிகின்றன. இதைப் போலவே பெறுதற்கரிய மானிடப் பிறவி எடுத்த மக்களும் கோடிக் கணக்கிலே பிறக்கிறார்கள். காலம் முடிந்ததும் மரணத்தின் பிடியில் சிக்கிக் கோர அவஸ்தைக்குப்

போகிறார்கள். இதற்கு நீங்களும் நானும் விதி விலக்கல்ல என்றால் நீங்கள் இப்போது அழுது புலம்புவதில் அர்த்தமே இல்லை. அப்பா! இது வரை யார் செய்யும் தொழிலைக் குறித்துச் சந்தேகம் கொண்டேனோ இன்று அதே தொழிலைச் செய்யும் எமனுக்கே என்னைத் தானப் பொருளாகக் கொடுத்துவிட்டீர்கள்! கேள்விக்குரிய அந்த எம னிடமே என் சந்தேகங்களைக் கேட்டுத் தெரிந்து கொள்கிறேன்.

வாஜ : நசிகேதஸ்! நீ என்ன வெறிகொண்டவனைப் போலப் பேசுகிறாய்? நீ எமலோகம் போ என்று எப்படியடா என் வாய் திறந்து சொல்வேன்?

நசி : அப்பா! உங்கள்உள்ளத்தைத் திடப்படுத்திக் கொள்ளுங்கள். எனக்குரிய ஆயுட்காலம் முடிந்தா நான் எமலோகம் செல்கிறேன்? "காடு வாவென வீடு போவென, ஒரு முதுகூனும் மந்தியெனும்படிக்குந்தி நடந்து மதியும் அழிந்து செவிதிமிர் வந்து வாயறியா மல் விடாமல் மொழிந்து இருமல் பொருது, தொண் டையும் நெஞ்சமும் உலர்ந்து வரண்டு துகிலும் இழந்து சுரணையும் அழிந்து மலஜலம் வந்து கால் வழி மேல் வழி சார" நடந்தா நான் எமன்பதிக்குச் செல்கிறேன்? அப்பா! எல்லா வேதங்களையும் ஓது கின்ற நீங்களே இப்படிக் கலங்கலாமா? நன்றாக யோசித்துப்பாருங்கள். மக்கள் எல்லோரும் தம் ஆயுட் காலம் முடிந்ததும் நாறிச் செத்து எம உலகம் போகின்றார்கள். அப்பா.. மரணமில்லாப் பெரு வாழ்வில் வாழ்ந்திட வேண்டும் என்பதிலே எனக்கு அளவுகடந்த வெறி இருக்கிறது. மரணத்தை வெல்லுதல் வெற்றிஎன்றால் மரணத்தைத் தழுவுதல் தோல்விதானே! இத் தோல்வியின் இரகசியங்களைத் தெரிந்து கொண்டால் மரணம் வாராமல் காத்துக் கொள்ளலாம் அல்லவா? வெற்றிக்கு அதுதானே

முதற்படி? அப்பா...சிங்கத்தை வெற்றி கொள்ள அச் சிங்கத்தின் குகைக்குள்ளேயே நுழையப் போகிறேன். மரணத்தின் இரகசியங்களைத் தெரிந்து கொள்ளப் போகிறேன். எந்த மருத்துவராலும் போக்க முடியாதபடி மரணத்தை ஒவ்வொருவருக்கும் செய்து உயிரைப் பறித்துக் கொண்டு செல்லும் மறலியைச் சந்திக்கப் போகிறேன்.

வாஜ : நசிகேதஸ்! பாம்பின் வாய்த் தேரை என்ற பழமொழியை நீ கேள்விப்படவில்லையா? எமன் பதிக்குச் சென்றவர்கள் மீண்டு வந்ததில்லையே!

நசி : அப்பா! நம் குலத்தில் தோன்றிய மார்க்கண்டேயரின் மாண்பினை நீங்கள் எனக்குச் சொல்லியதை அதற்குள் மறந்து விட்டீர்களா? அப்பா...நிஜமாகவே மரணம் என்ற ஒன்று இங்கு வாராத முன்பே... நீங்கள் கற்ற சமயக் கல்வியெல்லாம் சிறிதும் உதவாமல் பயனற்று இருப்பதைப் பார்க்கும்போது அந்த மரணத்தின் இரகசியங்களை அறிந்தே தீர வேண்டும் என்ற வெறி பிறக்கிறதப்பா. மரண இரகசியங்களை மரண தேவனிடமிருந்தே அறிவதற்கு என்னை அவருக்குத் தானம் செய்தீர்கள்; தியாகம் புரிந்தீர்கள், அப்பா...அந்த எமன் பதிக்குச் செல்ல எனக்கு நல்லாசி கூறி மகிழ்ச்சியோடு விடை கொடுங்கள்.

வாஜ : நசிகேதஸ்! யாகத்தில் சொன்னபடி உன்னை எமனுக்குத் தானம் செய்து விட்டேன்.




## காட்சி - 4

(எமலோகம். எமதர்மராஜர், சித்திரகுப்தர், எம தூதுவர்கள், காவலர்கள், நசிகேதஸ் முதலியவர்கள்)

காவலன் 1 : அண்ணே! அதோ ஒரு உருவம் வருகிறது பார்த்தாயா?

காவலன் 2 : ஆமாம்! தூல உடம்போடு இந்த எம லோகத்திற்கு வருவதென்றால்...ஆச்சரியமாக இருக்கிறதே!

காவ-1 : நாம் பார்த்தும் கேட்டும் இராத காட்சியாக அல்லவோ இது இருக்கிறது! நாம் காண்பது பொய்த் தோற்றமா? உண்மையான மனித வடிவம் தானா?

(அதற்குள் நசிகேதஸ் வருகிறார்.)

நசிகேதஸ் : (காவலர்களைப் பார்த்து) ஐயா காவலர்களே! எமலோகம் என்பது இதுதானா?

காவ-1 : ஆம், இதுதான் எமலோகம்! வயதிலே மிகச் சிறிய வராகத் தோற்றமளிக்கும் நீர் யார்? எதற்காக இங்கு வந்தீர்? மானிட சரீரத்தோடு எவருமே வர முடியாத இந்த இடத்தில் இப்படி வர உம்மால் எப்படி முடிந்தது?

ம—2

நசி : ஐயா! பூலோகத்தில் உள்ள பாரத நாட்டில் வாஜ சிரவஸ் என்பவரின் புதல்வன் யான். என் பெயர் நசிகேதஸ். என் தந்தையார் செய்த யாகத்தில் என்னையே இந்த எமலோக அதிபதிக்குத் தானம் செய்து விட்டார். ஆகவே நான் இந்த எம லோகத்தை நாடி வந்திருக்கிறேன். நான் எமதர்ம ராஜரை உடனே பார்க்க வேண்டும்.

காவ-2 : உம்மை இந்தத் தூல உடம்போடு உள்ளே விட முடியாது. எம் அரசரின் ஆணை கிடைத்த பிறகு தான் உம்மை உள்ளே விட முடியும். அதுவரையில் இங்கேயே இருங்கள்.

நசி : அப்படியே இருக்கிறேன்.

காவ-1 : (உள்ளே எமதர்மராஜரிடம் சென்று) அரசே! ஒரு பெரிய அதிசயம் நடந்திருக்கிறது. உங்களைக் காண வேண்டும் என்பதற்காகப் பூலோகத்தில் இருந்து தூல உடம்போடு ஒருவர் வந்திருக்கிறார். நம் வாயிலில் காத்துக் கொண்டிருக்கிறார்.

எமதர்மராஜர் : (வியப்புடன்) என்ன? என்னைக் காணத் தூல உடலோடு வந்திருக்கிறாரா? சித்திரகுப்தரே!... வந்திருப்பவர் யார்? எதற்காக வந்திருக்கிறார்?

சித்திரகுப்தர் : அரசே! நசிகேதஸ் என்ற பெயரை உடைய இவர் நேற்றே இங்கு வந்திருக்க வேண்டும்.

எம : அப்படியா?

சித் : ஆம்! வாஜசிரவஸ் என்பவரின் புதல்வர்தான் நசிகேதஸ். தந்தையார் செய்த யாகத்தில் தம் புதல்வரையே உங்களுக்குத் தானமாகக் கொடுத்து விட்டார். தந்தை வாக்கினைக் காப்பாற்ற இத் தனயன் இந்த லோகத்திற்கே வந்து விட்டார். தெளி

வான் அறிவும், உறுதியான உள்ளமும், மாயைக்கு மயங்காத மனமும் கொண்ட நசிகேதஸ்...

எம : சித்திரகுப்தரே! மேலும் பேச்சு வேண்டாம். நீர் வெளியே சென்று நசிகேதஸிடம் இதமாகப் பேசி இங்கு வந்த கருத்தினை மாற்றிக் கொண்டு திரும்பிப் போகுமாறு செய்து விடுங்கள். முன்பு சத்தியவானுக்காகச் சாவித்திரி வந்தது போல் நடக்க விடக் கூடாது. உடனடியாக என்னைச் சந்திக்க முடியாது என்று கூறித் திருப்பி அனுப்பி விடுங்கள்.

சித் : அரசே! நசிகேதஸ் எவர் பேச்சுக்கும் இணங்க மாட்டார். மேலும்...

எம : இனி எந்த விளக்கமும் வேண்டாம். இப்போது சந்திக்க முடியாது என்று திருப்பி அனுப்பி வைக்க முயலுங்கள்.

சித் : (வெளியே வந்து நசிகேதஸைப் பார்த்து) நசிகேதஸ்... வர வேண்டும். வர வேண்டும்!

நசி : தாங்கள் தான்...

சித் : நீங்கள் நினைக்கும் எமதர்மராஜர் உள்ளே இருக்கிறார். உலகத்து மனித தலைகளாகிய ஏட்டில் இந்த லோகத்தின் கணக்கினைச் சரி பார்க்கும் பணியில் இருப்பவன். என் பெயர் சித்திரகுப்தன்.

நசி : ஓ! அவர்தானா நீங்கள்! நான் உங்கள் அரசரை உடனே பார்க்க வேண்டும். என் தந்தையாரின் வாக்கினை நிறைவேற்ற வேண்டும். அதற்கு முதலில் வழி செய்யுங்கள்.

சித் : நசிகேதஸ்! வயதில் சிறியவராக இருந்தாலும் உள்ளத்தின் உறுதி உங்கள் பேச்சில் பளிச்சிடுகிறது.

நான் சொல்லப் போவதை நீங்கள் கேட்க வேண்டும்! உங்கள் தந்தையார் எதற்காக யாகம் செய்தார்?

நசி : மக்களாகப் பிறந்தவர்கள் அடைந்தே தீர வேண்டிய உயர் பேறுகள் எல்லாவற்றையும் அடைய.

சித் : உம் தந்தையார் யாகத்தின் வாயிலாக விரும்பும் பேற்றையெல்லாம் எங்கள் அரசர் கொடுத்து விட்டால் போதுமா?

நசி : நீங்கள் கொடுப்பன என் தந்தைக்குத்தான் போய்ச் சேரும். எனக்கு?

சித் : உமக்கும் அவ்வாறே கொடுத்து விடுகிறோம்.

நசி : நான் அதை மட்டும் விரும்பி இங்கே வரவில்லையே! சித்திர குப்தரே! எங்கள் பூலோகத்தில் உள்ள எல்லா உயிர்களையும் தம் கையகப் படுத்திக்கொண்டு ஆட்டிப் படைக்கின்ற பேராண்மை உடைய உங்கள் அரசருக்கு நான் ஒரு விருந்தாளியாக வந்திருக்கிறேன். அவரைப் பார்க்காமல் இங்கிருந்து செல்வது தர்மமல்ல.

சித் : நீங்கள் விரும்பியபடி எங்கள் அரசரை இப்போது பார்க்க முடியாது. சில நாட்கள் ஆகும்.

நசி : எத்தனை நாட்கள் ஆனாலும் காத்திருந்து பார்த்து விட்டுச் செல்லச் சித்தமாயிருக்கிறேன்.

சித் : நசிகேதஸ்... பூலோகத்தில் உள்ள மக்களுக்கு ஒரு மடங்கு பசி என்றால் இந்த எமலோகத்திற்கு வந்து விட்ட உயிர்களுக்கு ஒன்பது மடங்கு பசி அதிகரித்து விடும். வந்த சிறிது நேரத்திற்குள்ளேயே இதனை

நீங்கள் உணர்ந்து கொண்டிருப்பீர்கள் என்று எண்ணுகின்றேன்.

நசி : யாகத்தில் தானமாக அளிக்கப் பெற்ற பிராம்மண அதிதியை உடனே சந்திக்காதது முதல் குற்றம். சந்தித்து விருந்தாளியாக ஏற்றுக் கொள்ளாதது இரண்டாவது குற்றம். விருந்தாளியின் வயிற்றை ஒன்பது மடங்கு பட்டினி போட்டுக் காய வைப்பது...வேத விதிப்படி எவ்வளவு பெரிய பாபம் என்பது தங்கட்குத் தெரியாததல்ல! எனக்கென்ன? நடப்பது நடக்கட்டும்.

சித் : நசிகேதஸ்! உங்கள் எண்ணம் புரிந்து கொண்டேன்...நானே எமதர்ம ராஜரின் ஆணை பெற்று உங்களை அழைத்துச் செல்கிறேன். சற்றே பொறுங்கள்.

## காட்சி-5

(எமதர்ம ராஜர், நசிகேதஸ், சித்திரகுப்தர் உரையாடுகின்றார்கள்.)

எமதர்மராஜர் : சித்திரகுப்தரே! மூன்று நாட்கள் ஆகியுமா இன்னும் அந்த நசிகேதஸ் நம் வாயிலை விட்டுப் போகவில்லை? வீர வைராக்கியச் சித்தர் போலிருக்கிறதே!

சித்திரகுப்தர் : உங்களிடம் நான் அன்றே சொன்னேன். தாங்கள்தாம் கவனிக்கவில்லை. நசிகேதஸ் வந்த நாளன்றே நீங்கள் பார்த்திருந்தால் திருப்பிஅனுப்பி இருக்கலாம்.

எம : நசிகேதஸின் நோக்கம்தான் என்ன?

சித் : நீங்கள் பூலோகத்தில் பிறக்கின்ற ஒவ்வொரு மனித தலைகளிலும் எழுதுகின்றபொல்லாதவிதி எழுத்தினை மாற்றி நல்ல மதி எழுத்தினைப் பதிப்பித்துக் கொள்ளும் வழியினைத் தேடி அடையவே இங்கு வந்திருக்கிறார்.

எம : அப்படியா? நன்றாக அவர் மனத்தைச் சோதித்துப் பார்த்தாயா?

சித் : உலகப் போகப் பொருள் மீது சிறிதளவு இச்சை இருந்தால்கூடப் போதுமே,எப்படியாவது மனத்தை

மாற்றிவிடலாம். வயதில் சிறியவர் என்றாலும் அறிவிலும் உள்ளத்திலும் மிகப் பெரியவர் என்பதில் சந்தேகம் வேண்டாம். ஆகவே உலகில் உள்ள மற்ற மக்களைப் போல நசிகேதஸை எண்ண முடியாது. அவர் உள்ளம் மண், பெண், பொன் இவற்றில் சிறிதளவு கூட ஒட்டவே இல்லை. உங்களைப் பார்க்காமல் திரும்பிப் போவதில்லை என்று உறுதி கொண்டிருக்கின்றார்.

எம : மூன்று நாட்களாகப் பசியால் வாடி வதங்கியும் உள்ளம் தளரவில்லை என்றால், மூவாசைகளுக்கும் சிறிதும் அசைந்து கொடுக்கவில்லை என்றால் அவர் மகா சமர்த்தர்தான். சித்திரகுப்தரே! எம்மை நாடி வந்த அதிதியின் வயிற்றை வாடச் செய்து விட்ட பாவம் எம்மைத் தேடி வந்து விடும் போல் தெரிகிறது. ஒரு தொல்லையைத் தவிர்க்கப் போய்ப் பல தொல்லைகள் அல்லவா வந்துவிட்டன?

சித் : அதற்கும் ஒருவழி இருக்கிறது. விருந்தினராக வந்த அந்த அந்தண அதிதியை மூன்று நாட்கள் கவனிக்காமல் இருந்து விட்ட பெரும் பாவச் செயலுக்கு அவர் விரும்பி வேண்டும் மூன்று வரங்களைக் கொடுத்து விடுங்கள். இன்றே இதைச் செய்து விட வேண்டும். இல்லையெனில் உங்களிடமுள்ள புண்ணியங்கள் அவரைச் சென்று அடைந்து விடும்.

எம : நம் வாயிலில் காத்துக் கொண்டிருக்கும் அந்த அந்தண அதிதியை உள்ளே அழைத்து வாருங்கள்.

(நசிகேதஸ் உள்ளே வருதல்)

நசிகேதஸ் : எமதர்ம ராஜரே ...என் தந்தையார் வணக்கத்தையும் என் வணக்கத்தையும் தங்கட்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எம : என்னிடத்து விருந்தாளியாக வந்த உம்மை மூன்று நாட்கள் காக்க வைத்து விட்ட பெருந்தவறைச் செய்து விட்டேன்.

நசி : ஐயனே! பூலோகத்தில் உள்ள மனிதர்கள் உங்களைச் சந்திக்க வேண்டுமென்றால் மரணமாகிய பெரும் துன்பத்தை அனுபவிக்கும் காலத்தில்தானே சந்திக்க முடியும்? நான் மூன்று நாட்கள் அன்ன ஆகாரமில்லாத விரதத்தாலேயே இப்படி இதோ உங்களைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருப்பது வியப்பல்லவா?

எம : நசிகேதஸ்!...மூன்று நாட்களாகத் தொடர்ந்து நடந்து விட்ட தவறுக்கு மன்னிக்க வேண்டும்.

நசி : தாங்கள் இச்சிறியோனிடம் இப்படிக் கூற வேண்டாம். எம் தந்தையார் உம் தவற்றை மன்னித்து விட்டார்கள். ஐயனே! நல்வினை தீவினை இவற்றின் வழியாகவே ஒவ்வொருவருடைய உயிரையும் பறித்துக் கொண்டு விடுகின்ற உங்களுக்கு நான் ஒரு விருந்தாளியாக வந்திருப்பது பற்றி மிகவும் மகிழ்ச்சி அடைகின்றேன். என் தந்தையார் செய்த யாகத்தின் பயனை அனுபவிக்க நான் துடித்துக் கொண்டிருக்கிறேன்.

எம : நசிகேதஸ்! நான் சொல்வதைக் கவனமாகக் கேட்பீராக. உம்மை மூன்று நாட்கள் காக்க வைத்த குற்றம் என்னைச் சாரக் கூடாது. அதற்காக உமக்கு மூன்று வரங்கள் தர முழு மனத்தோடு சம்மதிக்கின்றேன். மூன்று வரங்களை என்னிடம் கேட்டுப் பெற்றுக் கொள்ளலாம்.

நசி : (மகிழ்ச்சிச் சிரிப்பு) ஐயனே! நீங்கள் எனக்கு மூன்று வரங்கள் அளிக்க முன் வந்தது பற்றி மட்டற்ற

மகிழ்ச்சி அடைகின்றேன். நானும் என் தந்தையாரும் மட்டுமல்ல, எங்கள் குல முழுவதும் உங்கட்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறது.

எம : நசிகேதஸ்! ..நீர் வரங்களைக் கேட்கலாம்.

நசி : ஐயனே! என் தந்தையார் "விஸ்வஜித்" யாகம் செய்யும்போது மிகுந்த கோப உணர்ச்சியால் உந்தப்பட்டே என்னை உங்களுக்குத் தானமாகக் கொடுத்தார். ஆகவே, என் தந்தையார் முதலில் என் மேல் சிறிதளவும் கோபமோ மனவருத்தமோ இல்லாதவராக இருக்க வேண்டும். உம்மிடம் மூன்று வரங்களையும் பெற்றுக் கொண்டு என் தந்தையாரைக் காணச் செல்லும்போது என்னை மகிழ்ச்சியோடு ஆசீர்பதித்து ஏற்றுக் கொள்ள வேண்டும். இப்போது என்னைப் பிரிந்ததால் மன வருத்தம் அடையாதவராக இருக்க வேண்டும். இதனையே முதல் வரமாக உம்மிடம் கேட்க விரும்பு கிறேன்.

எம : நசிகேதஸ்! மகன் தந்தைக்காற்றும் உதவியாக நீர் கேட்ட முதல் வரத்தினைக் கேட்டு மகிழ்ச்சியடை கிறேன். நீர் விரும்பியது போலவே உம் தந்தையார் உம் இடத்துச் சிறிதளவும் சினம் கொள்ளாதவ ராகவே இருப்பார். நீர் இவ்வுலகத்தை விட்டுத் திரும்பிச் சென்று அவரைப் பார்க்கும் காலத்தில் அகமும் முகமும் மலர உம்மை வரவேற்று ஆசி கூறுவார்கள். உம் தந்தையாரின் உள்ளத்தில் சாந்தியும் அமைதியும் சர்வ மங்களமும் சதா குடி கொண்டிருக்கும். இதில் சந்தேகம் வேண்டாம் நசிகேதஸ்... உமது இரண்டாவது வரத்தைக் கேட்க லாம்.

நசி: உம்முடைய மரண வாடையே நுழைய முடியாத— பிணி மூப்பு சாக்காடு அணுக முடியாத பேரின்பச் சித்திப் பெருவாழ்வுக்கு உறைவிடமான சுவர்க்கபதி வாழ்வை அடைவதற்குரிய வழியை எனக்குக் காட்டியருள வேண்டும் இதுவே உம்மிடம் வேண்டும் என் இரண்டாவது வரமாகும்.

எம: நசிகேதஸ்! மானிட ஜன்மம் எடுத்துவிட்ட ஒவ்வொருவரும் கட்டாயமாக அறிந்து கொண்டே ஆக வேண்டிய—தெரிந்துகொண்டே தீர வேண்டிய ஒப்பற்ற வரத்தினைக் கேட்ட உம்மை என்ன சொல்லிப் பாராட்டுவதென்றே தெரியவில்லை. பூலோகத்தில் நீர் பல ஆசார்யர்களைச் சந்தித்துக் கேட்ட வினாக்களுக்கெல்லாம் இப்போது விடை கிடைக்கப் போகிறது நசிகேதஸ்! .....ஊன்றிக் கவனித்துக் கேட்பீரா?

நசி: ஐயனே! பசித்தவனுக்கா உணவின் அருமை தெரியாது. வியாதியால் சிறிது சிறிதாக நலிந்து கொண்டிருப்பவனுக்கா மருந்தின் பெருமை தெரியாது. என் செவியையே வாயாக நெஞ்சையே களமாகக் கொண்டு உம் மலர் வாய்ப் பிறக்கும் வாசகத் தேனை அள்ளிப் பருகிடத் துள்ளி நிற்கிறது என் உள்ளம். ஆகவே, தெள்ளத் தெளிவாக அடியேனுக்கு இதனைக் கூறியருள வேண்டும்.

எம: என் அன்பிற்குரிய நசிகேதஸ்! இப்போது நான் சொல்லும் அக்கினி தத்துவத்தைப் பற்றிய விளக்கத்தில் அமைந்த சொற்களுக்கெல்லாம் இரண்டு அருத்தங்கள் உண்டு. ஒன்று வெளிப்படையான, ஏட்டறிவால் அவரவர்கள் கற்றுள்ள நூலறிவிற்குத் தக்கபடி கொள்ளும் அருத்தம். மற்றது தெய்வ ஆசார்யர்களால், மெய்க்குரு

பிரான்களால் மட்டுமே வெளிப்படுத்திக் காட்டும் பொருள். இதனையே ரகசியார்த்தம் என்று கூறுவார்கள். இதனை மெய்க்குரு பிரான்கள் வாயிலாக மட்டுமே தெரிந்து கொள்ள முடியும். ஆம்!... நசிகேதஸ்! உலகத்தில் மக்களாய்ப் பிறந்தவர்கள் எல்லாம் என் கையில் அகப்பட்டு நரகத்திற்குச் செல்லாமல் ரட்சித்துக் காக்கும் பொருட்டு வான நாட்டு உலகத்தில் இருந்து பரம்பொருளால் முத்திகரிக்கப் பெற்ற அவதார புருஷர்கள் பூலோகத்திற்கு வந்துகொண்டே இருக்கிறார்கள். வெவ்வேறு வடிவங்களிலே, வெவ்வேறு இடங்களிலே, வெவ்வேறு நாமங்களிலே அவர்கள் மக்களை உய்விக்கும் பொருட்டுத் தோன்றிக் கொண்டே இருப்பார்கள். மனிதனுக்காக மட்டுமே தனிச் சீதனமாசத் தந்துள்ள—நன்மை இது தீமை இது என்று பகுத்து அறிகின்ற அறிவினாலும், சந்தேகங்களைக் கேட்டுணரும் வாக்கறிவாலும், அச்சந்தேகங்களை நீக்கும் ஞான சைதன்ய வார்த்தைகளை உள்ளம் சம்மதிக்கச் செவிமடுக்கும் செவிச் செல்வக் கேள்வியறிவாலும் அவதாரமாக வருகின்றவர்கள் மெய்த்தெய்வம் என்று தெளிந்து உணர்ந்து அவர்களைத் தஞ்சமாக அடைய வேண்டும். அப்படித் தஞ்சமடைந்த மக்களை அவர்கள் மாற்றிப் பிறப்பித்து அந்தணர்களாக்கி அவர்களின் இதயக் குகைக்குள் புகை இல்லாது கொழுந்து விட்டெரிகின்ற அக்கினியை, கோதற்ற மணிவிளக்கை, மாசிலா மணியை, கோடி சூரியப் பிரகாசக் காயத்திரி தேவியை, சைவமங்களத்தை, வைணவப் பேரானந்தப் பெருவாழ்வை, சர்வ மதங்களின் ஞான ஒளி விளக்கினை, அக்கினி தத்துவத்தை நன்றாகக் காட்டுவார்கள். காட்டித் தூண்டிவிடுவார்கள். நசிகேதஸ்! 'கு' என்ற எழுத்திற்கு அந்தகாரமாகிய அஞ்ஞானம் என்று அருத்தம். 'ரு' என்ற எழுத்

திற்குத் தேஜஸ் என்று அருத்தம். அஞ்ஞானத்தை விழுங்கும் பிரம்மம், குருவே ஆவார். இதில் சந்தேகம் வேண்டாம். இத்தகைய குரு தெய்வம் தான் மக்களின் இதயமாகிய குகைக்குள் இருக்கும் விளக்கினைப் பிளந்து விளக்கினை ஏற்றி விளக்கினுக் குள்ளே விளக்கினைத் தூண்டி விளக்கில் விளக்கினை விளக்கிக் காட்டுவார்கள். அவர்கள் காட்டுவது பிறப்பற்றது; ஆதி அந்தம் அற்றது. என்று முள்ளது; அழிவற்றது; அனைத்துக்கும் முன் உள்ளது; அணுவுக்கணுவாயது; அண்டத்திற்கெல்லாம் பெரி தாயது; சரீரம் அழிந்தும் அழியாமல் நிற்பது. சற்குருவின் அருளால் அதனைத் தன்னுள் அறிந்த வர்கள் அழியா வாழ்வடைவார்கள். என்னை வெல்லும் திறம் பெறுவார்கள். மற்றவர்களை எல்லாம் நான் மிதித்தேறி நரகத்தில் தள்ளுவேன். நசிகேதஸ்! மக்களின் இதய வீட்டில் இராப்பகல் இல்லா இடத்தில் வீற்றிருக்கும் அக்கினியை மெய்ந்நிலை கண்ட ஆசான் காட்டக் கண்டு உணர்வதே அக்கினி வித்தை என்பதை நன்றாகப் புரிந்து கொள்வீராக.

நசி : ஐயனே! அக்கினி வித்தையென்பதெல்லாம் யாகத் தில் செய்யப்படுவதாக அல்லவா...சொல்கிறார்கள்?

எம : நசிகேதஸ்! நான் முதலில் சொன்னதை நினைத்துக் கொள்ளவில்லையே! அதற்குள் மறந்து விட்டீரே! ரகசியார்த்தப் பொருளைக் குருவடிவாகி வரும் அந்த வேத முதல்வன்தான் காட்டிச் சொல்ல முடியும். நன்றாக இதனை ஊன்றி வைத்துக்கொள். யாகம், யாகசாலை என்பதெல்லாம் எவை தெரியுமா? உடம்பே யாகசாலை. உம் இதயமே யாக குண்டம். அன்பு, பொறுமை, அவா அறுத்தலே மூன்று கற்கள். குரு வடிவாகி வரும் தெய்வத்தின் திருதரிசனையே அக்கினி; அதில் வெந்து நீறுவன ஆணவம்.

மாயை, கன்மம் ஆகிய மும்மலங்கள்; இந்த அக்கினி வித்தையாகிய பிரம்ம வித்தையின் விளைவுதான் மரணமிலாப் பெருவாழ்வாகிய சுவர்க்கபதி வாழ்வு. நசிகேதஸ்! பூவுலகில் பிறக்கின்ற மக்கள் எல்லாம் நித்தியர்கள் ஆகுவதற்காகவே, வேதங்கள், தத்துவங்கள், பிரம்ம சூத்திரங்கள் எல்லாம் வந்தன. இவற்றை மனிதனுக்குக் கைபலிதமாக்கித் தருவதற்காகவே வந்த, வருகின்ற, வரும் அவதார புருஷர்களை நீர் வந்திக்கும் அளவிற்கு, பந்திக்கும் அளவிற்கு, சிந்திக்கும் அளவிற்கு மரண பயம் நீங்கும். முத்தி வாழ்வு ஓங்கும். இந்த வழியை விடுத்து, எல்லா வேதங்களைக் கரைத்துக் குடித்தாலும் நுண் அறிவால் அவற்றையெல்லாம் ஆய்ந்தாய்ந்து பார்த்தாலும், இந்த அக்கினி வித்தையை, பிரம்ம வித்தையை அறிந்து கொள்ள முடியாது. குவலயத்தில் குருவடிவாகி வந்த ஆசார்ய புருஷர்கள் வாயிலாக மட்டுமே இதனை அறிந்துகொள்ள முடியும். நசிகேதஸ்! இது மிகவும் ரகசியமானது! ஆனால்.... இதுவே சத்தியமானது; சத்தியமானது; சத்தியமானது.

நசி : ஐயனே, உலகத்தில் தோன்றிக் கொண்டே இருக்கும் அவ்வளவு வேதங்கள், இதிகாசங்கள் புராணங்கள் எல்லாம்...

எம : தவறாக எண்ணிவிட வேண்டாம். பூவுலகில் சற்குருவைப் பெற்றுக்கொண்டவர்களுக்கு அவையெல்லாம் சாட்சியாக வந்து நின்று இன்பத்தைத் தரும். சற்குருவைப் பெறாதவர்களுக்கு என்னை அடைய அவையே வழிகாட்டும்.

நசி : மானிடப் பிறவி எடுத்தவர்களுக்கு ஒரு சற்குருவின் துணை எவ்வளவு அவசியம், அதி முக்கியமானது

என்பதை அழகாக ஆணித்தரமாக எனக்கு அறிவுறுத்தினீர்கள். இதைப் போல் இதுவரை யாரிடமும் நான் கேட்டதே இல்லை.

எம: யாரையும் கேட்கவிடாமல் தட்டிவிட்டுக் கொண்டிருப்பதல்லவா கலியனின் வேலை? நசிகேதஸ்! சிவபெருமான் பார்வதி தேவியாருக்கு உபதேசித்த மெய்ம்மொழிகளை அப்படியே உமக்குச் சொல்கிறேன்.

"எவர் முக்கண் இல்லாத சாக்ஷாத் சிவமாயும், இரு புஜமுடைய விஷ்ணுவாயும், நான்முகமில்லாப் பிரம்மாவாயும் இருக்கின்றாரோ அவரே ஸ்ரீ குருவெனப்படுகின்றார்."

"மரணத் தருவாயில் தன் குலமாவது, தான் தேடிய செல்வமாவது, தன்னுடைய பலமாவது, தான் கற்ற சாஸ்திரமாவது, உற்றார் உறவினராவது, கூடப்பிறந்த சகோதரர்களாவது இவனுக்கு வந்து உதவப் போவதில்லை. பரமகுரு ஒருவரே வந்து நித்திய கால அவஸ்தையாகிய அந்த மரண ஆபத்தினின்று கரை ஏற்றுகின்றார்."

"ஆகவே தியானத்திற்கு மூலம் குருவடிவம்; பூசைக்கு மூலம் குருவின் **திருவடிகள்**; மந்திரத்திற்கு மூலம் குருவின் வாக்கியம்; முத்திக்கு மூலம் குருவின் கிருபை."

நசிகேதஸ்! மகாதேவன் மலைமகளுக்குக் கூறியருளிய ஞானம் பெறுவதற்குரிய இம் மந்திர மொழிகளை உம் உள்ளத்தில் ஆணி அறைந்தாற் போல் ஊணி வைத்துக் கொள்க. உலகில் மக்களாய்ப் பிறந்த அனைவரும் என்னுடைய கோரமான மரணப்பிடியில் இருந்து தப்புவதற்குத் தக்க வழி; சிறந்த வழி, ஒரே வழி இதுதான். இதைத்

தவிர வேறு வழிகள் எல்லாம் என்னிடம்தான் கூட்டிக் கொண்டு வரும். நசிகேதஸ்! நீர் கேட்ட இரண்டாம் வரமாக நான் கூறியவை யெல்லாம் புரிந்து கொண்டீரா?

நசி : நன்ருகப் புரிந்து கொண்டேன்.

எம : அப்படியாளுல் நான் உமக்குக்கொடுத்த இரண்டாம் வரத்தின் கருத்தினைச் சுருக்கமாகச் சொல்ல முடியுமா?

நசி : (உரத்த குரலில்) விழிமின்! எழுமின்! உண்மையான சற்குருவைத் தேடியடைந்து ஞானம் பெறுமின்... ஐயனே! இவைதாமே நீர் தந்த இரண்டாம் வரத்தின் ஜீவ சொற்கள்?

எம : நீர் மகா புத்திசாலி! பிரம்ம வித்தையாகிய அக்கினி வித்தையை அறிவதற்குச் சாமான்ய அறிவு போதாது. மகா அறிவு, மகாமானம், மகாஉறுதி, மகா தெளிவு இருக்க வேண்டும். இவை அனைத்தும் உம்மிடம் அமைந்துள்ளதால்தாம் நான் சொன்னதைப் புரிந்து கொண்டீர், அப்படியே ஏற்றுக் கொண்டீர். இந்த அக்கினி வித்தை இனிமேல் பூலோகத்தில் உம் பெயரால் நசிகேதாக்கினி என்று வழங்கும்...நசிகேதஸ்... இனி மூன்ருவது வரத்தைக் கேட்கலாம்.

நசி : ஐயனே! உலகத்தில் மக்கள் மரணமடைந்த பிறகு என்ன ஆகிருர்கள் என்பது புரியாத புதிராக உள்ளது. பலர் பலவிதமாகக் கூறுகிருர்கள். சிலர் மரணத்திற்குப் பின் பேயாக உலவுகிருர்கள் என்கிருர்கள். இன்னும் சிலர் அக்கருத்தை மறுக்கிருர்கள். நீங்கள்தாம் இதனை விளக்க வேண்டும். மக்களுக்கு மரணம் எவ்வாறு வருகிறது என்பதையும், மரணத்திற்குப் பின் அவர்கள் அடையும் நிலை

யையும் தாங்கள் எனக்கு விளக்கிக் கூறவேண்டும். இதுவே என் மூன்றாவது வரமாகும்.

எம : தேவலோகத்தில் வாழும் தேவர்கள் கூட முழுமையாகத் தெரிந்து கொள்ள முடியாத கேள்வியைக் கேட்டுவிட்டீர். இது அவ்வளவு எளிதாகக் கொடுக்கக் கூடிய வரமல்ல. பரம ரகசியமானது; மகா நுட்பமானது; நசிகேதஸ்! தயவு செய்து இந்த வரத்தைத் தவிர வேறு எந்த வரத்தைக் கேட்டாலும் நான் தருகிறேன். இந்த வரத்தை மட்டும் என்னிடம் வற்புறுத்தாதீர்!

நசி : தேவர்களாலேயே புரிந்து கொள்ள முடியவில்லை என்றால் நரப்பிறப்பிலே உள்ள எனக்கு எவ்வளவு ஐயங்கள் ஏற்பட்டிருக்கும்? உலகத்தில் உள்ள அனைவரையும் மரண பயத்தால் ஆட்டிப் படைக்கும் நீங்கள்தாம் இதற்குச் சரியான விடை கூற முடியும்.

எம : நசிகேதஸ்... உம் வயதிற்கேற்ற வரமல்ல இது. நன்றாக யோசித்து வேறு வரத்தைக் கேளுங்கள். இதற்காக ஒருநாள் உமக்கு அவகாசம் தருகிறேன்.

நசி : ஐயனே! நீர் அளிக்கும் ஒருநாள் இடைவெளியை நான் விரும்பும் வகையில் பயன் படுத்திக் கொள்ளலாமா?

எம : என்ன சொல்கின்றீர்?

நசி : உம் ஆட்சி அமலில் உள்ள நரகலோகத்தை நான் ஒரு முறை சுற்றிப் பார்க்க வேண்டும்.

எம : சுற்றிப் பார்க்கவா...?...அப்படியே செய்யுங்கள்... சித்திரகுப்தரே! நம் ஆட்சிக்குட்பட்ட நரக லோகத்தை இவருக்குச் சுற்றிக் காண்பித்து விட்டு வா...

## காட்சி-6

(இடம் நரக லோகம், இறந்தவர்களின் பேய்த் தேகங்கள் படும் வேதனையைச் சித்திரகுப்தர் காட்ட, நசிகேதஸ் பார்க்கின்றார்.)

நசி : சித்திர குப்தரே! இங்கு என்ன ஒரே துர்வாடை! இருக்கவே முடியாது போலிருக்கிறதே! ஆங்காங்கே சிறு குன்றுகள் போல் குவியல் குவியலாக இருக்கின்றனவே!

சித்திரகுப்தர் : இந்த உலகத்திற்கு நரக லோகம் என்ற பெயர் எப்படி ஏற்பட்டது தெரியுமா?

நசி : தெரியாதே!

சித் : இங்குள்ள நர ஆவிகளுக்கு உணவே நரகல்தான்.

நசி : ஐயோ...தெய்வமே!... (காதைப்பொத்திக்கொண்டு) இதுவா உணவு? என்ன கொடுமை இது?

சித் : ஆம்! விதவிதமான நரகல்கள் இங்கு பயன் படுவதால்தான் நரகலோகம் என்றபெயரே ஏற்பட்டது.

நசி : இந்த உணவிற்குக் காவல் வேறு வேண்டுமா?

சித் : மரணமடைந்த உடன் உடலை விட்டுப் பிரிந்து வரும் நர ஆவிகளுக்கு, பேய்த் தேகம் எடுத்துக் கொண்டு வருபவர்களுக்கு ஒன்பது மடங்கு பசி எடுக்கும். இந்தப் பசிக்கு இங்கு அளவாக வழங்கப்படுகிற இந்த "உணவு" கொஞ்சமும் போதாது. ஆகவே இந்த ஆவிகள் இதனைக் கொள்ளை அடித்துச் சாப்பிட்டு விடும். அதற்காகத்தான் ஒவ்வொரு நரகல் குவியலுக்கும் இரு கிங்கிலியர்கள் தீச்சாட்டையுடன் காவல் இருக்கிறார்கள்.

நசி : என்ன பயங்கரம்? சித்திர குப்தரே...இந்த உருவத்தின் உடம்பெல்லாம் புண்ணுகிச் சீழ் வடிந்த வண்ணமாக இருக்கிறதே ..ஏன்?

சித் : அனுமதி இல்லாமல் அத்துமீறி இந்த நரகலேத் திருடித் தின்றதால் காவல் காக்கும் கிங்கிலியர்களின் தீச்சாட்டை அடிபட்டு உடம்பெல்லாம் புண்ணுகிச் சீழ் வடிந்து கொண்டு இருக்கிறது.

நசி : இவன் உடம்பில் புளியங்கொட்டை அளவிற்குக் கூடப் புண் இல்லாத இடம் இருக்காது போல் தோன்றுகிறதே. பசியின் கொடுமை இவ்வளவு கோரமானதா? (இச்சமயம் கோரமான சப்தத்தைக் கேட்டுத் திரும்புகின்ருர்.) இது என்ன? இவனைத் துடிக்கத் துடிக்க நெருப்பில் இட்டு வாட்டி எடுக்கிருர்களே. உயிர் என்ன ஆவது?

சித் : நசிகேதஸ்! இந்த நரக லோகத்தில் உள்ள ஆவிகள் அத்தனையும் நித்திய உடம்பு, அதாவது அழியாத சூக்கும தேகம் பெற்றவை. அதனுல் நெருப்பில் போட்டாலும் அந்த அலகைத் தேகமும் உயிரும் அப்படியே இருக்கும். ஆனுல் அந்த நெருப்பின் துன்பத்தை மட்டும் அவன் அனுபவிப்பான்.

நசி : இப்படி எவ்வளவு காலத்திற்கு இந்த வேதனை?

சித் : கணக்கிட்டே சொல்ல முடியாது. அவ்வளவு காலத்திற்கு.

நசி : உம்மிடம் நான் ஒரு கணக்குக் கேட்கலாமா?

சித் : ஓ! கேட்கலாமே!

நசி : ஒருவன் பூலோகத்தில் சுகமாக வாழும் காலத்தையும் அவனே இங்கு வந்து நரக வேதனையை அனுபவிக்கும் காலத்தையும் ஒப்பிட்டுக் கூறமுடியுமா?

சித் : நரக லோகத்தில் வாழும் காலத்தை எண்ணிப் பார்க்கும் போது மனிதனுடைய உலக வாழ்க்கை

யின் கால அளவு ஒரு நொடிப் பொழுதைப் போன்றதே.

நசி : மனிதனுடைய நூறு வயது என்பது அவ்வளவுதானு? ஆச்சரியமாக இருக்கிறதே! இந்தக் கணப்பொழுது வாழ்வுக்கு உலகத்தில் நடக்கின்ற போராட்டங்கள், கொலைகள், கொள்ளைகள், ஏமாற்றல் சூது, வாது, வஞ்சம்...அப்பப்ப .. எவ்வளவு பரிதாபமான வாழ்க்கை...மனிதனை மனிதன் அழித்துக் கொண்டு வாழ்கிருனே! யுகங் கோடி கால நரக வாழ்க்கைக்கா? சித்திர குப்தரே . மரணத்திற்குப் பின் ஒவ்வொரு மனிதனுக்கும் நித்திய நீண்ட கால நரக வாழ்வு உண்டு என்பதை ஏன் அறிய முடிவதில்லை?

சித் : நசிகேதஸ்! உலக மாயை என்பது அதுதான் உலக மக்களை உய்விப்பதற்காக அவ்வப்போது வான நாட்டில் இருந்து இறங்கி வரும் அவதாரச் செம்மல் கள் எத்தனையோ உபாயங்கள் மூலமாக உலகியல் வாழ்வு அநித்தியமானது என்று பன்னிப் பன்னிச் சொன்னுலும், வேத வேதாந்தங்களாக ஓதினுலும் மக்கள் மனத்திலே ஓர் அழுத்தமான இருட்டு இருக்கிறது. "செத்த பிறகு ஒன்றுமில்லை" என்பதுதான் அந்த அழுத்தமான இருட்டு. அந்த இருட்டையே ஒளிமயமான வாழ்வு, அமர வாழ்வு என்று தர்க்கம் செய்து கொண்டு ஒவ்வொருவனும் உழைத்து ஓடாகித் தன் வயிற்றையும், தன்னை நம்பியவர்கள் வயிற்றையும் நிரப்புவதிலேயே தன் அருமையான இளமைக் காலத்தையெல்லாம் கழித்து விடுகின்ருன். இந்தக் கலியனின் மாயையில் இருந்து விடுபடுவதென்பது அவ்வளவு சுலபமல்ல.

நசி : மனிதன் இதிலிருந்து விடுபடவே முடியாதா?

சித் : தாகமெடுத்தவனல்லவா நீர் குடிப்பான்? பசித்தவன்தானே உணவைப் புசிப்பான்? அழுத

பிள்ளை அல்லவா பால் குடிக்கும்? மரணத்திற்குப் பின் நித்திய கோரமான நரக வாழ்க்கை முடிவில்லாத காலத்திற்கு உண்டு என்று யார் உணர்கிறார்களோ, அவர்களுக்குத்தான் "ஞானப் பசி" எடுக்கும். நசிகேதஸ்! உம்மை இங்கே கொண்டு வந்து விட்டது எது தெரியுமா?

நசி; தெரியுமே! மிருகங்களைப் போல் உண்டு உறங்கி இறப்பதற்கல்ல மனிதன் வந்தது என்ற எண்ணமே என்னை இங்கு கொண்டு வந்து விட்டது.

சித் : இந்த எண்ணம் வந்தவர்களுக்குத்தான் நல்ல குருபிரான் வந்து வாய்ப்பார்கள். மற்றவர்கள் எல்லாம் வயிற்றுப் போராட்டத்தை மட்டுமே லட்சியமாகக் கொண்டு இறுதியில் நித்திய அவஸ்தைக்குச் செல்லும் மரண வாயிலில் நடக்கும் போராட்டத்தை எண்ணிப் பார்ப்பதே இல்லை. அது மட்டுமல்ல இத்தகைய போராட்டம் என்பதே இல்லை என்ற முடிவுக்கு வந்துவிட்டார்கள். கலி புருஷனின் மாய வலையில் சிக்கிய மக்களுக்கு அவர்களின் பேய்மனமே நித்திய வாழ்வைப் பற்றிய எண்ணம் வாரா வண்ணம் சதி செய்து புலன்களையெல்லாம் ஆட்டி வைக்கிறது. புலன்கள் அறிவை வென்று இறுதியில் மரணப் படுகுழியில் அவர்களைத் தள்ளிவிட்டுத் தனியே ஒதுங்கி விடுகின்றன. இதையெல்லாம் உணர்ந்து மெய்யான தெய்வத்தை அடைந்தவர்களுக்குத்தான் மேலான அழியாத வாழ்வு கிட்டுகிறது.

நசி : சித்திரகுப்தரே! இந்த நரகலோகத்தின் வேதனைகள் என் உள்ளத்தில் பல உண்மைகளைத் தெள்ளத் தெளிய உணர்த்திக் கொண்டே இருக்கின்றன. போதும் இந்த நரகலோகக் காட்சிகள். போகலாம்.

(இருவரும் போகிறார்கள்.)

## காட்சி - 7

(எமதர்மராஜாவும் நசிகேதசும் உரையாடுகிறார்கள்.)

எமன் : நசிகேதஸ்! ..உம்முடைய மூன்றாவது வரத்தினை நான் கேட்டு அறிந்து கொள்ளலாமா?

நசிகேதஸ் : எல்லாம் நன்மைக்கே என்று எண்ணிக் கொண்டு வாழ்பவர்களுக்குத் தீமையெல்லாம் நன்மையாகிவிடும் என்று சொல்லுவார்கள். அதில் எவ்வளவு உண்மை இருக்கிறது என்பது நேற்றுத் தான் எனக்குத் தெரிந்தது.

எம : நீர் கூறுவதன் பொருள்?

நசி : நரகத்தில் உயிர்கள் அனுபவிக்கும் துன்பம் எவ்வளவு பயங்கரமானது என்பதை நேற்றுத்தான் என் கண் களால் கண்டேன். இந்த நரக வாழ்வைப் பார்த்த போது எனக்கு ஏற்பட்ட தெளிவும் படிப்பினையும் இவ்வளவு அவ்வளவு என்று சொல்லமுடியாது.

எம : என்ன படிப்பினை ஏற்பட்டது?

நசி : உம்முடைய நித்திய நரகலோக அவஸ்தையைக் கண்டுதான் மெய்ஞ்ஞான வாழ்வை ஒரே மனத் துணிவாக அடைந்தே தீருவது என்று திடசங்கல்பம் கொண்ட சித்தர்கள், முத்தர்கள், யோகிகள், ஞானிகள், முனிவர்கள் உலக போகங்களையெல்லாம் வெறுத்துப் பொறுக்க முடியாத துன்பம் வந்தாலும் அவற்றையெல்லாம் சகித்துக் கொண்டு உம்முடைய

மரணப் பிடியில் இருந்து தப்பி இருக்கிறார்கள். இப்பேருண்மை உம்முடைய நரகலோகக் காட்சியைக் கண்ட பிறகு என் உள்ளத்தில் ஒளி விளக்காகப் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது.

எம : இன்னும் உம் உள்ளம் மரணத்தைப் பற்றியே வட்டமிட்டுக் கொண்டிருக்கிறது. அது போகட்டும். உமக்கு வேண்டிய மூன்றாவது வரத்தைக் கேட்கலாமே.

நசி : நான் நேற்றைக்கு முன் தங்களிடம் கேட்ட அதே வரத்தைத்தான் இன்றும் கேட்கிறேன். என் நிலையில் எந்த மாறுதலும் இல்லை. இருக்காது; இருக்க முடியாது.

எம : நசிகேதஸ்!...பல நூற்றாண்டுகளுக்கு மனைவி மக்களை உமக்குத் தருகிறேன். உலக போகத்திற்குத் தேவையான அனைத்துப் பொருள்களையும் தருகிறேன். பூலோகத்தில் எவராலும் எச்சக்தியாலும் அசைக்க முடியாத விரிந்து பரந்த பேரரசாட்சியைத் தருகின்றேன். நீர் எத்தனை ஆண்டுகள் வாழ வேண்டுமென்று விரும்புகின்றீரோ அத்தனை ஆண்டுகள் இன்பத்தில் இம்மி அளவுகூடக் குறையாமல் வாழலாம். மனமுவந்து தருகிறேன். பூலோகத்தில் மக்கள் தேவப் பெண்களை அடைந்து வாழ்வதென்பது முடியாத செயலாகும். அவர்களையும் உமக்குத் தருகின்றேன். நீர் விரும்பும் வரையில் அவர்களுடன் இன்பமாக வாழலாம்.

(ஒரு கணம் தாமதித்து) ஏன் கல்லாய்ச் சமைந்து விட்டீர்?

நசி : யான் உம்மிடம் ஒரே ஒரு கேள்வி கேட்கலாமா?

எம : தாராளமாகக் கேட்கலாம்.

நசி : எங்கள் பூலோகத்தில் உள்ள அத்தனை மக்களுடைய அதிகாரங்களும் அமலாண்மைகளும் இறுதியில் யார் கையில் அடக்கம்?

எம : இது என்ன கேள்வி . . . சர்வ உலகமும் யார் கையிலா...?

நசி : உலகத்தையே ஆட்டிப் படைக்கும் மன்னாதி மன்னனாக இருந்தாலும் இறுதியில் அவன் யார் கையில் அடக்கமாகின்றான்? எமதர்மராசரே . . . . உங்கள் கையில்தானே அடக்கமாகின்றான். உலகத்தில் உள்ள எல்லா உயிர்களும், அவ்வுயிர்களின் வல்லமையும், சம்பத்தும், அறிவும், ஆற்றலும், ஆராய்ச்சியும், மருந்தும் ஒன்று சேர்ந்தாலும் உங்கள் கையில் இருந்து தப்ப முடியுமா? முடியாதே! எப்படிப்பட்ட கோமானாக இருந்தாலும் நீங்கள் வந்தவுடனே துக்கமாக அல்லவா முடிந்து விடுகிறது? பொன்னையும் பொருளையும் வாரி வழங்குவது போலக் காட்டி விட்டு முடிவில் நீங்கள்தாமே எடுத்துக் கொள்கின்றீர்கள்? கொடுப்பது போல் கொடுத்துப் பறித்துக் கொள்ளும் பொருளை நான் உங்களிடம் கேட்டு என்ன பயன்? நரக வேதனையைக் கண்களால் கண்ட பிறகுமா நான் உங்களிடம் அழியும் பொருள்களை வேண்டுவேன்? நீங்கள் கொடுக்கும் பொன்னும் பொருளும் போகமும் எவ்வளவு காலத்திற்கு என்னிடம் இருக்கும்? உங்கள் ஆவி அடித்ததும் நிற்குமா? நிற்காதே! அக்கினி வித்தையாகிய பிரம்ம வித்தையை அறியும் வழியைக் கேட்டறிந்த என்னிடமா தாங்கள் இவ்வாறு கூறுவது? நான் உலகில் அநித்தியமான வாழ்வைக் கொண்டே நித்திய வாழ்வைக் கைபலிதமாக்கிக் கொள்ளப் பிறந்தவன். அதுதான் என் வாழ்வின் குறிக்கோள். ஆகவே, நீங்கள் அளிக்கும் போகப் பொருள்கள்

எனக்கு வேண்டாம். மனிதனுக்கு மரணம் ஏன் வருகிறது? எப்படி வருகிறது? மரணத்திற்குப் பின் மனிதன் என்னவாகின்றான்? இந்த வினக்களுக்கெல்லாம் தெளிவாக விடை கூறுங்கள். அக்கினி வித்தையாகிய பிரம்ம வித்தையைத் தெரிந்து கொள்ள அருள் புரிந்த நீங்கள் இவற்றையும் தெளிவாக எனக்குக் கூறி அருள வேண்டும்.

**எம :** நசிகேதஸ்!..உங்களுடைய திடமான உள்ளத்தை நான் பாராட்டுகின்றேன். மெய்ஞ்ஞானம் பெறுவதற்கு உங்களைப் போல் ஒரே மனம் கொண்டவர்கள் இதுவரை என்னைச் சந்தித்ததே இல்லை. உங்களைப் போன்ற உள்ள உறுதி கொண்ட எதார்த்த தன்மையுடையவர்களையே இனியும் நான் சந்திக்க விரும்புகின்றேன். உலக போகத்திற்கு அடிமையாகாத உங்கள் உள்ள உறுதி கண்டு வியந்து நிற்கின்றேன்.

**நசி :** என்னை நீங்கள் அளவிற்கதிகமாகவே புகழ்ந்து பேசி விட்டீர்கள். உலகத்து அழி பொருள்களை எந்த அளவிற்கு வெறுக்கின்றேனே அந்த அளவிற்கு என்னைக் குறித்த புகழ்ச்சியான வார்த்தைகளையும் வெறுக்கின்றேன். என்னிடத்து நல்ல குணங்கள் இருந்தால் அவற்றின் பெருமை என்னை மகனைப் பெற்று வளர்த்த என் தந்தையாரையே சாரும். “தந்தை அறிவு மகனுக்கு!” “தாயைப் போலப் பிள்ளை” என்பன உலகத்துப் பழமொழிகள் அல்லவா?

**எம :** நசிகேதஸ்! எத்தனையோ வழிகளில் திட்டமிட்டு உம்மைச் சோதித்து விட்டேன். அனைத்திலும் வெற்றி பெற்றுவிட்டீர்கள். மூன்றும் வரத்தினைக் கேட்டுப் பெற்றுக் கொள்வதற்கு நல்ல தகுதி பெற்று விட்டீர்கள். இப்போது மூன்றும் வினவிற்கு விடை கூறுகின்றேன். கவனமாகக் கேட்பீராக.

நசிகேதஸ்! இந்தச் சர்வ புவனங்களும் எதற்காகப் படைக்கப் பெற்றன என்பது தெரியுமா?

நசி : ஓரளவிற்கு அறிவேன். "படைத்த படைப்பெல்லாம் மனுவுக்காக; மனுவைப் படைத்தது தன்னை அறிய" என்பது ஞான உலகத்தின் ரத்தினச் சுருக்கமான பழமொழி அல்லவா?

எம : ஆகா......நன்ருகச் சொல்லிவிட்டீர்கள். மனிதனைக் குறியாக வைத்தே ஆயிரத்தெட்டு அண்டங்களும் உயிர் வாழ்வதற்குரிய சூழல்கள் அனைத்தும் படைக்கப் பெற்றுள்ளன. அநித்திய வாழ்வில் இருந்து நித்திய வாழ்வை மனிதன் அடைய வேண்டும். இதற்காகவே உலகில் அவதார புருஷர்கள் மனித தூலத்தில் வந்து கொண்டே இருக்கிருர்கள். அவர்களே கண்கண்ட தெய்வம்; மெய்யான தெய்வம். என் அமலாண்மையை முறியடித்து வெற்றி கொள்ளும் பேராற்றல் இவர்களுக்கு மட்டுமே உண்டு. இவர்களைத் தவிர வேறெந்த சக்தியாலும் என்னை வெற்றி கொள்ள முடியாது. உலகில் தோன்றும் இந்த அவதார புருஷர்களை அறிந்து கொள்ள வேண்டும் என்பதற்காகவே மனிதனுக்குப் பேசும் வாய்மையும் கேட்கும் கேள்விச் செல்வமும் கொடுக்கப் பெற்றன. மற்ற ஐயறிவு உயிர்களுக்கு இல்லாத இவ்விரு பெரும் அறிவுகளும் மனிதனுக்கு மட்டும் கொடுக்கப் பெற்றதன் நோக்கமே, மனிதனுகப் பிறந்த ஒவ்வொருவனும் தன்னை நித்தியனுக்கிக் கொள்ள ஒரு நீதியரை — அவதார புருஷரை — மெய்க்குரு பிரானை அடைய வேண்டும் என்பதுதான்.. நசிகேதஸ்!...இதில் இருந்து தவறுகிறவர்களுக்குத்தான் மரணம் என்ற தண்டனை கொடுக்கப்படுகிறது. இம்மரணம்தான் நரகத்தின் வாயிற்படி. நசிகேதஸ்!

உலகத்தில் வாழும் ஐயறிவு உயிர்களுக்கு நித்திய வாழ்வு என்பதொன்று இல்லே. ஆனுல் மனிதன் சாகும் அந்த இறுதி நேரத்தில் இருந்து நித்திய வாழ்வு ஒன்று ஆரம்பமாகிறது. ஆம்! மரணத்திற்குப் பின் ஒவ்வொரு மனிதனுக்கும் நித்திய தேகம் ஒன்று கொடுக்கப்படுகிறது. அத்தேகம் நரகத் துன்பங்களேத் தாங்கும் அழியாத தேகம். பேரின்பம் அனுபவிக்கும் நித்திய தேகம் எடுப்பதற்குப் பதிலாக நரகத் துன்பம் அனுபவிக்கும் நித்திய தேகம் கொடுக்கப்படுகிறது. பரம்பொருளின் படைப்பை எல்லாம் வீணுக்கிய - நன்றி கொன்ற மக்கள் பூலோகத்தில் எத்தனே கோடியாக இருந்தாலும் அவர்கள் அனைவரும் என் கை அடக்கமே!

நசி : மனிதனுக்கு மரணம் ஏன் வருகிறது என்பதை எனக்கு விளக்கமாக எடுத்துக் கூறினீர்கள். இனி மனிதனுக்கு மரணத்தைக் கொடுத்து எவ்வாறு உயிரைப் பறித்துக் கொள்கிறீர்கள் என்பதை விளக்கமாகக் கூறுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

எம : இறைவன் படைத்த படைப்பை வீணுக்கிய மக்களின் ஆயுட்காலம் முடிவடையும் தருவாயில் அவர்கள் முன், அவர்கள் மட்டும் காணுமாறு என் தூதர்கள் நிற்பார்கள். என் தூதர்கள் எதிரில் நின்றுலே போதும்; சாவோடு போராடும் மக்களின் உயிர் அவர்கள் உடலேவிட்டுப் பிரிந்து வெளியேறும். அப்போது எவ்வளவு வேதனேப்படுவார்கள் தெரியுமா? ஒரு கருக்கரிவாளே நெருப்பில் இட்டுக் காய்ச்சி முழுச் சூட்டோடே தொண்டையில் வைத்து அறுத்தால் என்ன கஷ்டமிருக்குமோ அத்தகைய கோரக் கொடிய கஷ்டமிருக்கும். அதை வாய் விட்டு வெளியே சொல்லவும் முடியாது; பொறுத்துக் கொள்ளவும் முடியாது. உள்ளே

நடக்கும் அமளியின் அல்லோலகல்லோலங்கள் வெளியே தெரியவில்லை என்றாலும் அதை அனுபவிப்பவர்களுக்குத் தெரியாமலா போகும்? அதனால்தான் சிலர் முதலில் அலறுவார்கள். பிறகு உளறுவார்கள். மனிதக் குரல் மாறிவிடும்; மிருகம்போல் உறுமுவார்கள். முகத்தில் இருந்த மனிதத் தோற்றம் மாறிக் கொடூர குரூர அலங்கோலம் அவருபம் அதாவது பேய்த் தேகம் எடுத்துவிட்ட அடையாளம் பகிரங்கமாகத் தெரிந்துவிடும். இப்படிக் கருத்த பேய்த் தேகம் எடுத்துவிட்ட கணத்திலிருந்து உடல் வலிமை மூன்று மடங்கும் பசித் தீவனம் ஒன்பது மடங்குமாக அதிகரித்து விடும். நசிகேதஸ்! இவ்வாறு மனிதர்களின் உடலில் இருந்து பிரித்தெடுக்கப்பட்ட உயிர்கள் அவரவர்கள் செய்த பாவங்களின் அளவிற்கேற்ப மீளாத நரகத்தில் தள்ளப்படுகின்றன. சிலர் மீண்டும் பிறப்பெடுக்கப் பெண்களின் வயிற்றை அடைகிறார்கள். சிலர் ஓரறிவு முதல் ஐந்தறிவு ஈறாக உயிர் வர்க்கங்களில் ஒன்றை அடைகிறார்கள். இந்த நியதியில் இருந்து எந்த மனிதனும் தப்பவே முடியாது. நசிகேதஸ்! மக்கள் மரணமடைந்த பிறகு நித்திய அவஸ்தையாகிய நரகத் துன்பங்களை அடுக்கடுக்காக அனுபவித்துக் கொண்டே இருப்பார்கள். இருக்கிறார்கள். மரணத்தின் ரகசியம் இதுதான். மனிதனுக்கு மரணம் ஏன் வருகிறது? எப்படி வருகிறது? மரணத்திற்குப் பின் மனிதன் அடையும் நிலைகள் எல்லாம் புரிந்து கொண்டாயா?

நசி : ஐயனே! என் ஐயங்கள் எல்லாம் தெளிந்தன. சிக்கலான வரங்களை நான் விரும்பியபடி எனக்கு மனமுவந்து அளித்துவிட்டீர்கள். என் குல முழுதும் இதற்காக நன்றிக் கடன் செய்யக் கடமை பூண்டுள்ளது. மீண்டும் உங்களிடம் வாரா வழிகளையெல்

லாம் எனக்கு வரமாகத் தந்தருளிவிட்டீர்கள். குவலயத்தில் குருவடிவாகி எழுந்தருளி வருகின்ற தெய்வங்களின் பெருமையை உணராதவர்க்கு நீங்கள் எமன் என்றால் அவர்களின் பெருமையை உணரும் எம்போல்வார்க்கு நீங்கள் தர்மராஜர் ஆகின்றீர்கள். எமதர்மராஜர் என்ற நாமத்தினை உங்களுக்குச் சூட்டி அழைப்பதன் கருத்தை இப்போது நான் நன்கு உணர்கிறேன். ஐயனே! நான் மீண்டும் இங்கு வாராதவாறு அருள்புரிய வேண்டுகின்றேன்.

எம: நசிகேதஸ்! அப்படியே ஆகட்டும்!



அடுத்த வெளியீடு :

# மெய்வழி சோமசுந்தரம் செட்டியாரின் வடலூர் வள்ளற்பெருமானுர்

# வாழ்க்கை சரிதம்

- 1871 ஆம் ஆண்டிற்குப்பின் ''29 ஆண்டுகள் கழித்து (கலி 5000 மேல்) வருகின்ற கடவுள்....தனித்தலைமைப் பெரும்பதி'' என்ருர் வள்ளலார். கலி 5000 ஆண்டிற்குப்பின் அதாவது கி.பி. 1900 பின் வந்தருளிய தனித்தலைமை பெரும்பதி யார்?
- ''சைவ முதலாக நாட்டும் பல சமயங்கள் எல்லாம் தனித்தனிக் காட்டும் தெய்வம் இதுவந்து பாரீர்'' நிருபணை செய்து காட்டிய தெய்வம் யார்? எப்படி நிருபணை செய்து காட்டினுர்கள்?
- ''ஆண்டவர்கள் வரப்போவதும் சத்தியம்தான், நம்மவர்களின் திரை நீங்கப் போகின்றதும் சத்தியம்தான்'' என்ருர் வள்ளலார். ஆண்டவர்கள் எங்கு எப்போது வந்தார்கள்? எவர் திரை நீங்கிற்று?
- ''சாலைவாசி இறந்தால் (நல்லடக்கமானல்) அவர் மனைவி தாலி வாங்குதல் வேண்டாம்'' — வள்ளலார். ஏன்?
- ''பரன் அளிக்கும் தேகமிது சுடுவது அபராதமெனப் பகர்கின்றேன்'' ஏன்?
- இறந்தார் எழுவர்! எங்ஙனம்?
- ''கடைவிரித்தோம்; கொள்வாரில்லை; கட்டி விட்டோம்'? என்ருர் வள்ளலார். கடை விரித்த சரக்கு எது? மக்கள் ஏன் கொள்ளவில்லை?

இன்னும் பல வினுக்களுக்கு தெள்ளத்தெளிவான விளக்கமுடன் வெளிவருகிறது.

* முழுக்க முழுக்க ஆராய்ச்சி நோக்கு! கேட்டறியா புதிய செய்திகள்!
* இதுபோல் இதுவரை வெளி வந்ததில்லை.
* இதுவே முதல் நூல்! புரட்சி நூல்.